ஸ்ரீரஸ்து



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத் வரவரமுநயே நம:

**ஸ்ரீதேவராஜகுரு என்னும்**

**எறும்பியப்பா அருளிச்செய்த**

**அம்ருதபலாவளி:**

**என்கிற**

# ஸ்ரீகடிகாசலநரஸிம்ஹஸ்தோத்ரம்

  

**மிக்கானை மறையாய் விரிந்தவிளக்கை ' என்னுள்**
**புக்கானைப் புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை '**
**தக்கானைக் கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த '**
**அக்காரக்கனியை அடைந்துய்ந்துபோனேனே.**

பெரியதிருமொழி 8-9 4


திருப்பதி ஸ்ரீ.உ.வே ந்யாயவேதாந்த வித்வான்

**திருமலை அனந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசார்யர் ஸ்வாமி**

(எழுதிய தமிழுரையுடன் கூடியது)



வெளியீடு:

**ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ**

**214, கீழ உத்தர வீதி**

**ஸ்ரீரங்கம் 620006**

**6—8— 1999**

விலை ரூ 30/- தபாற் செலவு தனி

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## முன்னுரை

அம்ருதபலாவளி: என்று பெயர் படைத்த ஸ்ரீகடிகாசல நரஸிம்ஹ ஸ்தோத்ரத்தை அருளிச்செய்தவர் - மணவாள மாமுனிகளின் முக்யசிஷ்யர்களாகக் கருதப்படுகிற அஷ்ட திக்கஜாசார்யர்களில் ஒருவரான எறும்பியப்பா ஆவர். இவர் சோளஸிம்ஹபுரத்துக்கு அண்மையில் உள்ள எறும்பி யென்னும் கிராமத்தில் அவதரித்தவர். மஹாகவி, மஹா வித்வான். மணவாளமாமுனிகள் விஷயமாக இவர் வரவர முனிசதகம், வரவரமுனி காவ்யம், வரவரமுனிசம்பூ, வரவர முனிநாடகம் முதலிய பல நூல்களை இயற்றி யிருப்பதாகப் பெரியோர் கூறுவர். இவர் சரமபர்வ நிஷ்டரேயாயினும் சரமபர்வமான ஆசார்யர்களின் உகப்புக்காக இவ்வம்ருத பலாவளியை அருளிச் செய்தார் போலும்.

இவ்வாசிரியர் அம்ருதபலமென்று திருக்கடிகை எம்பெருமானை - அம்ருதம்போல் தித்திக்கும் பழமாகக் கருத்தில் கொண்டு, அப்பெருமான் விஷயமான ச்லோகங் களையும் அம்ருத பலங்களாக்கி, அத்தகைய ச்லோகங் களின் ஆவளி: – வரிசை, என்று பொருள்படும்படி, இந் நூலுக்கு அம்ருதபலாவளி: என்று நாமதேயம் சூட்டினர். எம்பெருமானுக்கு அம்ருதபலமென்று பெயரிட்டதற்கு மூலம் ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளேயாகும்.

II

திருமங்கையாழ்வார் '**இனியாய்! தொண்டரோம் பருகு இன்னமுதாய கனியே**' ! (பெரிய திருமொழி 7-1-6) *(இனிமையானவனே! ஸ்ரீவைஷ்ணவர்களாகிய அடியோங்கள் பருகும் அம்ருதமாய் அப்போதே எடுத்து நுகரலாம்படி கனிபோலேயிருக்கிறவனே)*–என்று திருமூழிக்களத்தெம் பெருமானை அம்ருதமாயும் கனியாயும் = அம்ருதம்போலும் கனிபோலும் தித்திப்பவனாக அருளிச் செய்துள்ளார். இதன்படி 'அம்ருதபலம்' என்று எறும்பியப்பா அருளியபதம் - 'அம்ருதஞ்ச தத் பலஞ்ச - அம்ருதபலம்' என்று விசேஷணோபயபத கர்மதாரய ஸமாஸங்கொண்டதென்று கொள்ளல் தகும்; இவ்விரண்டு விசேஷணங்களுக்கும் விசேஷ்யம் எம்பெருமானே யாகையால் என்க.

அம்ருதம் போல் தித்திக்கும் பழம் என்ற பொருளில் **அம்ருதமிவ பலம்** என்று உபமாநபூர்வபதகர்மதாரய ஸமாஸம்.

மேலும் சில ஸ்ரீஸூக்திகளைக் காண்போம். நம்மாழ்வார் '*மிக்கார் வேதவிமலர் விழுங்கும் என் அக்காரக்கனியே!* (திருவாய்மொழி 2-9-8)- பகவதனுபவத்தில் உயர்ந்தவர்களாய், வேதத்தில் விமலராகச் சொல்லப்பட்டுள்ள நித்யஸூரிகள் அநுபவித்து வருகின்ற அக்காரம் போலவும் கனிபோலவும் மிகவும் போக்யனானவனே - என்று அருளிச்செய்தார். அக்காரம் - கற்கண்டு. கனி - மாங்கனி போன்ற இனியபழம்.

திருமங்கையாழ்வார் 'அக்காரக்கனி' யென்னும் திருநாமத்தைத் திருக்கடிகையெம்பெருமானுக்குச் சூட்டி '*தக்கானைக் கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த அக்காரக்கனியை அடைந்துய்ந்து போனேனே*' (பெரியதிருமொழி 8-9-4) – பரமதார்மிகனை (பரமதார்ம

மாகிய தகவை - க்ருபையைஉடையவனை) திருக்கடிகை மலையின் மேலே அக்காரம்போலவும் கனிபோலவும் நிரதிசய போக்யனாயிருக்கிறவனை ஆச்ரயித்து உஜ்ஜீவிக்கப் பெற்றேன் என்று – அப்பெருமானை அக்காரமாகவும் கனியாகவும் அருளிச்செய்தார்.

நம்மாழ்வார் '*விழுமியவமரர் முனிவர் விழுங்கும் கன்னற் கனியினைத் தொழுமின்*' (திருவாய்மொழி 3-6-7) என்று அருளிச் செய்துள்ளமையும் காணத்தக்கது. இங்குக் கன்னற்கனி என்ற பதம் கன்னல் (கற்கண்டு) சேர்ந்த கனிபோலே நிரதிசய போக்யனானவன் - என்று பன்னீராயிரப்படியில் விவரிக்கப்பட்டுள்ளது. ஏற்கெனவே இனிமையான கனி – கன்னலும் சேர்ந்தால் மிகவும் இனிமையாக இருக்குமாபோலே மிகவும் போக்யனானவன் எம்பெருமான் என்று கூறியபடியிது. இதனை மத்யமபத லோபி ஸமாஸமென்னலாம். இருபத்துநாலாயிரப்படியிலும், ஈட்டிலும் கன்னற்கனி என்ற சொல், கன்னல்போலேயும் கனிபோலேயும் நிரதிசயபோக்யனானவன் - என்று விவரிக்கப்பட்டுள்ளது. இதனை கன்னலும் கனியும் ஆனவன் - கன்னற்கனி என்று விரிக்க. இது விசேஷணோ பயபதகர்ம தாரயஸமாஸம். ஈட்டில் மேலும், மாங்கனி (=மாமரம் பழுத்த பழம்) என்னுமாபோலே, கன்னற்கட்டியே மரமாய், அது பழுத்த பழம் காணுமிது என்று விவரிக்கப்பட்டிருக்கிறது. மாவின் கனி - மாங்கனி என்பதுபோலே கன்னலின் கனி - கன்னற்கனி என்று இதுதன்னை விரிக்க. இது தத்புருஷ ஸமாஸம்.

இங்ஙனமன்றி, அக்காரம் என்ற சொல்லை, ஸஹகாரம் (=தேமாமரம் =ஒட்டுமாமரம்) என்ற வட

சொல்லின் விகாரமாகக் கொண்டு - அக்காரத்தின்கனி - ஒட்டுமாமரத்தில் முதன்முதலாகப் பழுத்த பழம் - என்றும் பொருள் கொள்ளலாம்.

ஆக இவ்வருளிச்செயல் சந்தைகளையெல்லாம் திருவுள்ளம்பற்றியாயிற்று, இவ்வெறும்பியப்பா திருக்கடிகை யெம்பெருமானை அம்ருதபலம் என்று குறிப்பிட்டருளிற்று.

இங்ஙனமன்றி, கடிகாசலமாஹாத்ம்யத்தில் வேறு பொருளைக் கருதி, அம்ருதபலமென்று இப்பெருமானைக் குறித்திருப்பதுண்டேல் அதனையும் இவருக்கு ப்ரமாணமாகக் கொள்ளலாம்.

இந்நூலில் இவர் 5,27ம் ச்லோகங்களில் அம்ருத பலமென்று – அக்காரக்கனியெம்பெருமானையும், 83ம் ச்லோகத்தில் அம்ருதம் போல் தித்திக்கும் பகவதனுபவ கைங்கர்யங்களென்னும் மோக்ஷமாகிய பலத்தையும், 102ம் ச்லோகத்தில் தாமியற்றிய இந்த ஸ்தோத்திரத்தில் அடங்கி யுள்ள நூற்றிரண்டு ச்லோகங்களையும் குறிப்பிட்டருளி யிருப்பது காணத்தக்கது.

இந்த ஸ்தோத்திரத்தில் ஆசிரியர் திருக்கடிகையெம் பெருமானைப் பல பொருள்களாக ரூபணம் செய்து அப்பொருள்களுக்கும் எம்பெருமானுக்கும் பொருந்தும்படி விசேஷணங்களை சிலேடைவகையில் அல்லது உருவக வகையில் அமைத்துத் திறம்படக் கூறியிருப்பதனைப் பல ச்லோகங்களில் கண்டு அனுபவிக்கலாம். அப்பொருள்களை மேலே காண்க. அவ்வப் பொருள்களாக எம்பெருமானை உருவகித்துள்ள ச்லோகங்களின் எண்கள் கூடவே குறிக்கப்படுகின்றன.

| எண் | பொருள் | ச்லோகஎண் |
|---|---|---|
| (1) | ப்ரஹ்மம் | 74 |
| (2) | ஸர்வபிதா | 86 |
| (3) | ஸநாதந தர்மம் | •70 |
| (4) | ப்ராஹ்மணன் | 54,55 |
| (5) | அரசன் | 12,30,58,60,79,80,85 |
| (6) | ஸார்வபௌமன் | 93 |
| (7) | இந்திரன் | 97 |
| (8) | சூரியன் | 67,75,91,98 |
| (9) | சந்திரன் | 40,76,89 |
| (10) | அக்நி | 95 |
| (11) | குபேரன் | 72 |
| (12) | திக்பாலகர்கள் | 90 |
| (13) | யோகிபுருஷன் | 46 |
| (14) | பார்த்தஸாரதி | 47 |
| (15) | வைத்தியன் | 50 |
| (16) | விஷவைத்தியன் | 11,7? |
| (17) | தோழன் | 37 |
| (18) | வேடன் | 36 |
| (19) | குயவன் | 49 |
| (20) | படகோட்டி | 48 |
| (21) | கொடையாளி | 52 |
| (22) | யாசகன் | 44,51,56 |
| (23) | உண்பவன் | 61 |

இரண்டாண்டுகளுக்குமுன்பு ஒருநாள் இந்த ஸ்தோத்திரத்திற்கு ஓருரை எழுதவேண்டுமென்று அக்காரக் கனி எம்பெருமான் தனதின்னருளால் தோற்றுவிக்கவே, உடனே, ஸ்ரீ.உ.வே டாக்டர் V.V ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி பதிப்பித்த – ஸ்ரீ.உ.வே குமார வெங்கடாசார்யார் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்திமலரிலுள்ள இந்த ஸ்தோத்ரத்தைப் பல தடவைகள் ஸேவித்தேன். அதன் பின்பு சோளஸிம்ஹ புரத்தில் எழுந்தருளியுள்ள வித்வான் ஸ்ரீ.உ.வே கோ. க. ச. தாதாசார்ய ஸ்வாமிக்கு M.A., விண்ணப்பித்து இந்த ஸ்தோத்ரத்தின் கையெழுத்துப் பிரதியொன்றினைப் பெற்றேன். தற்செயலாகத் திருப்பதிக்கு எழுந்தருளிய ஸ்ரீ.உ.வே வ்யாகரண மீமாம்ஸா வேதாந்த சிரோமணி கோ.க.அ. ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் திறத்தில் இந்த ஸ்தோத்ரத்தின் பிரதியைப்பற்றி விண்ணப்பித்ததில், உத்யான பத்திரிகையில் பண்டிதராஜ ஸ்ரீ.உ.வே D.T தாதாசார்ய ஸ்வாமியால் பதிப்பிக்கப்பட்ட இந்த ஸ்தோத்ரத்தின் அச்சுப் பிரதியொன்றை அனுப்புவதாகச் சொல்லி, ஸ்ரீபெரும்புதூருக்குச் சென்றவுடன் மேற்படி அச்சுப்பிரதியை அனுப்பியருளினார். இப்பிரதிகளை உபகரித்த இம்மூன்று ஸ்வாமிகளின் ஸந்நிதிகளிலும் அடியேனுடைய க்ருத ஜ்ஞதா நுஸந்தான பூர்வகமான ப்ரணாமங்களை ஸமர்ப்பிக்கிறேன்.

இவற்றை வைத்துக்கொண்டு, இவற்றில் நல்ல பாடமென்று அடியேனுக்குத் தோன்றியவற்றைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு ஓருரை எழுதினேன். *'ச்ரேயாம்ஸி பஹுவிக்நாநி'* என்ற ஸத்ய வாக்கின்படியே பலவகை இன்னல்களைக் கடந்து எம்பெரு மான் திருவருளால் இவ்வுரை இப்போது ஒருவாறாக முடிவு பெறுகிறது. ஸர்வஜ்ஞரான எறும்பியப்பா அருளிய அம்ருதபலாவளியை அல்பஜ்ஞனான அடியேன் உரையெழுத எடுத்துக் கொண்டது ஸாஹஸமே

யாயினும் சாபலத்தினால் இதுதன்னில் மூண்டேனானேன். கற்றறிந்த பெரியோர்கள் இதன்கண் ஏற்பட்ட எல்லாக் குறைகளையும் தம்முடைய இயற்கையான இன்னருளால் க்ஷமித்தருளவேணுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

பொருள்விளங்காத சில ச்லோகங்களின் பொருளை விளக்கிக் கூறிப் பேருதவிபுரிந்த பன்மொழிப்பெரும்புலவர் ஸ்ரீமான் N.C.V நரஸிம்ஹாசாரியர் (டைரக்டர் - பாகவத ப்ராஜெக்ட் T.T.D) அவர்களுக்கு அடியேன் மனமார்ந்த நன்றிகலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மிகமிகச் சிறியேனாகிய அடியேனுடைய வேண்டு கோளுக்கு இணங்கி, 'ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ' என்ற ஸார்த்தக நாமதேயம் சாத்தப் பெற்ற ஸ்ரீ.உ.வே A. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமி, இவ்வம்ருதபலாவளியுரையைத் தமது செலவி லேயே பதிப்பித்து வெளியிடப்பேரருள் புரிந்தார். இவர் இவ்வாறு அருள் புரியும்படி, வித்வத்வரிஷ்டரான ஆழ்வார் திருநகரி இளையவில்லி ஸ்ரீ.உ.வே பூவராஹாசார்ய ஸ்வாமி கண்ணழிவற்றதொரு புருஷகாரம் செய்தருளினார். இந்த மஹான்கள் இருதிருநாமங்களுக்கும், இவ்விஷயத்தில் விண்ணப்பங்கள் எழுதி, முதலிலிருந்த ஆவன அத்தனையும் செய்து உதவியவர் - ஸ்ரீமான் சிரஞ்சீவி டாக்டர். மா. வரதராஜன் (தமிழ் விரிவுரையாளர் - S.V யூனிவர்ஸிடி காலேஜ், திருப்பதி)ஆவர். இம்மூவரில் முதலிரு திருநாமங் கள் திருவடித் தாமரைகளில் நன்றி கலந்த ப்ரணாமங்களை விண்ணப்பித்தும், மூன்றாம் சிரஞ்சீவிக்கு மனமார்ந்த ஆசியை வழங்கியும் அடியேன் விடை பெறுகிறேன். வாசிக தோஷம் க்ஷமித்தருளவேணும்.

திருப்பதி
23-6-99

தி.அ. க்ருஷ்ணமாசார்ய தாஸன்

ஸ்ரீரஸ்து



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்வரவரமுநயே நம:

ஸ்ரீதேவராஜகுரவே நம:

## எறும்பியப்பாவின் தனியன்

सौम्यजामातृयोगीन्द्र चरणाम्बुजषट्पदम् ।
देवराजगुरुं वन्दे दिव्यज्ञानप्रदं शुभम् ॥

ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ர சரணம்புஜஷட்பதம் ।
தேவராஜ குரும் வந்தே திவ்யஜ்ஞானப்ரதம் சுபம் ॥

## பதவுரை

ஸௌம்யஜாமாத்ரு யோகீந்த்ர – *அழகிய மணவாளமாமுனிகளின்*, சரணாம்புஜஷட்பதம் – *திருவடித் தாமரைகளில்* வண்டு போல் *படிந்து ரஸாநுபவம் செய்பவரும்*, திவ்யஜ்ஞாந ப்ரதம் – *தம்மையண்டினவர்க்கு உயர்ந்த ப்ரஹ்மஜ்ஞாநத்தை அளிப்பவரும்*, சுபம்– *அறிவினாலும் அனுஷ்டானத்தாலும்* சோபிப்பவருமான, தேவராஜ குரும் - *தேவராஜ குருவென்னும் எறும்பியப்பாவை*, வந்தே – *வணங்கித் துதிக்கிறேன்.*

## விசேடவுரை

*இவ்வெறும்பியப்பா மணவாளமாமுனிகளின் சிஷ்யா க்ரகண்யர்களான அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவராவர்; இவர் தேவராஜகுருவென்றும் வரதராஜ கவி என்றும் வழங்கப்படுகிறார். வானமாமலைஜீயர்,*

திருவேங்கடஜீயர், பரவஸ்துபட்டர்பிரான் ஜீயர், கந்தாடையண்ணன், எறும்பியப்பா, அப்பிள்ளை, அப்பிள்ளார், ப்ரதிவாதி பயங்கரமண்ணா ஆகிய இவர்கள் அஷ்டதிக்கஜங்கள் என்று ப்ரஸித்தர்களாயிருப்பர்.

'பாராரு மங்கை திருவேங்கடமுனி பட்டர்பிரான்
ஆராமம் சூழ்கோயிற் கந்தாடையண்ணன் எறும்பியப்பா
ஏராருமப்பிள்ளை அப்பிள்ளார் வாதிபயங்கரரென்
பேரார்ந்த திக்கஜஞ்சூழ் வரயோகியைச் சிந்தியுமே'

(யதீந்த்ர ப்ரவணப்ரபாவம்)

என்ற இச்செய்யுளின் வாயிலாக இவ்விஷயம் அறியத் தகும். இச்செய்யுளின் முதலடியின் நடுவிலுள்ள முனி என்பதனை முன்னும் பின்னும் கூடக்கூட்டி, பாராரு மங்கை (சிரீவரமங்கல)முனி, திருவேங்கடமுனி, பட்டர்பிரான்முனி என்றுகூட்டிப் பொருள் கொள்க.

'எறும்பியப்பா (எம்பெருமானாருக்கு) வடுக நம்பியைப் போலே தேவுமற்றறியாதே, ஜீயருக்கு (மணவாளமாமுனிகளுக்கு) அத்யந்தம் அபிமதரா யிருப்பர்' என்று யதீந்த்ரப்ரவண ப்ரபாவ க்ரந்தம் இவரைப் பற்றிக்கூறுவது காண்க.

இவர் தாமும், தாம் மணவாளமாமுனிகளின் சிஷ்யரென்பதை, இந்த அம்ருதபலாவளி என்ற ஸ்தோத்திரத்தின் இறுதியான ச்லோகத்தில் 'பக்த்யா ஸௌம்யவரகிங்கரோ பஹிதாம் அம்ருதபலாவளிம்' (பக்தியுடன் மணவாள மாமுனிகளின் தாஸனான அடியேனால் ஸமர்ப்பிக்கப்பட்ட அம்ருதபலாவளி என்ற ஸ்தோத்ரத்தை) என்று குறிப்பிட்டருளியிருத்தல் காணத்தக்கது.

ஸ்ரீரஸ்து
ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்
எறும்பியப்பா அருளிச்செய்த

# அம்ருதபலாவளி: என்னும் கடிகாசல நரஸிம்ஹ ஸ்தோத்ரம்

*மங்கள ச்லோகம்*

१)श्रीवेङ्कटेशचरणौ शिरसि करोमि स्मिताब्ज सहृदौ तौ ।
पृथुतरमपि भवजलधिं पिबतितरां यत्परागपरमाणुः ॥

(1) ஸ்ரீவேங்கடேசசரணௌ சிரஸிகரோமி ஸ்மிதாப்ஜஸுஹ்ருதௌ தௌ।
ப்ருதுதரமபி பவஜலதிம் பிபதிதராம் யத்பராகபரமாணு:॥

## பதவுரை

யத்பராக பரமாணு: – *எந்தத்திருவடிகளில் ஒட்டிக் கொண்டிருக்கிற ஒரு சிறுமண்துகள் கூட,* ப்ருதுதரம் – *மிகப் பெரிதான,* பவஜலதிம் – *பிறவிக் கடலையும்,* பிபதிதராம் - *அடியோடுகுடிக்க (வற்றச் செய்ய) வல்லதோ,* தௌ– *அத்தகைய,* ஸ்மிதாப்ஜ ஸுஹ்ருதௌ – *மலர்ந்த தாமரைகளோடு ஒத்த,* ஸ்ரீவேங்கடேச சரணௌ – *திரு வேங்கடமுடையானுடைய திருவடிகளை,* சிரஸி – *(எனது) தலையில்,* கரோமி– *வைத்துக் கொள்ளுகிறேன்.*

*எறும்பியப்பா தாம் இயற்ற நினைத்த அம்ருத பலாவளி என்ற கடிகாசல நரஸிம்ஹ ஸ்தோத்ரம் இடையூறேதுமின்றி இனிதே முடிவடைவதற்காகத் தமக்கு இஷ்டதெய்வமான திருவேங்கடமுடை யானுக்கு மங்களச்லோகமாக முதல் ச்லோகத்தை அமைக்கிறார்.*

நீரைத் தூர்ப்பதற்கு நீரைவிட அதிகமான அளவுடைய மண்தேவைப்படுவது உலகவியல்பு. அங்ஙனமிருக்க, திருவேங் கடமுடையானுடைய திருவடியிலுள்ள மிகச்சிறிய மண்துகள் தனது மகிமையினால் ஸம்ஸாரமென்னும் பெருங் கடலையும் தூர்த்துவிடுகின்றதென்பது மிக ஆச்சரியமாகும்.

## நூல்

२)श्रितघटिकाचल श्रृङ्गं शीतलकरुणातरङ्गितापाङ्गम् ।
मनसि ममोल्लसदङ्गं वसतिमहः किमपि वाससा पिङ्गम् ॥

**(2) ச்ரிதகடிகாசலச்ருங்கம் சீதளகருணாதரங்கிதாபாங்கம் ।**
**மநஸிமமோல்லஸதங்கம்வஸதி மஹ: கிமபி வாஸஸா பிங்கம் ॥**

ச்ரிதகடிகாசலச்ருங்கம்— திருக்க டிகைமலையின் சிகரத்தை அடைந்ததும், சீதள கருணாதரங்கித அபாங்கம் — குளிர்ந்த கருணையலையெறிகிற கடைக்கண் ணோக்கத்தையுடையதும், வாஸஸாபிங்கம் — வஸ்த்ரத் தினால் பொன்னிறங்கொண்டதும், உல்ல ஸத் அங்கம் — மிகவும் விளங்குந் திருமேனியைப் பெற்றதுமான, கிமபி மஹ: — ஒப்பற்ற தேஜஸ்ஸானது, மம மநஸி வஸதி — எனதுமனதில் உறைகின்றது.

திருக்கடிகையெம்பெருமானாகிய ஒளி எனது மனதில் உறைவதனால் அஜ்ஞானமென்றும் இருள் அகலப்பெற்றேன். நன்ஞானமும் பெற்றேன். இனி அப்பெருமானை உள்ளபடி அறிந்து இந்த ஸ்தோத்ரத்தைச் செய்து முடிக்க என்னால் முடியுமென்று தமது ஆற்றலைக் குறிப்பிட்டாராயிற்று இதனால்.

3)व्यत्यस्तचरणकमलां विनिहितभुजयुगळ मित्रजानुयुगाम् ।
विलसित रथाङ्गशङ्खां व्यक्तिमुपासे विरुद्धजातिमतीम् ॥

*(3)* வ்யத்யஸ்த சரணகமலாம் விநிஹிதபுஜயுகளமித்ரஜாநுயுகாம்।
விலஸித ரதாங்க சங்காம் வ்யக்திமுபாஸே விருத்தஜாதிமதீம் ॥

வ்யத்யஸ்தசரணகமலாம் — (வீற்றிருந்த திருக்கோலத்தில் இடது திருவடியை வலப்பக்கமாகவும் வலது திருவடியை இடப்பக்கமாகவும்) மாறுபட அமைத்த திருவடித்தாமரைகளையுடையதும், விநிஹித புஜயுகள மித்ர ஜாநுயுகாம் — வைக்கபட்ட இரண்டு திருக்கைகளுக்குத் தோழர்களான இரண்டு முழந்தாள்களைக் கொண்டதும்(= இரண்டு முழந்தாள்களின் மேல் சார வைக்கப்பட்ட இரண்டு திருக்கைகளைக் கொண்டதும்), விலஸித ரதாங்க சங்காம் — மிகவும் விளங்கும் சக்கர சங்குகளைப் பெற்றதும், விருத்த ஜாதிமதீம் — ஒன்றோடொன்று முரண்பட்ட நரத்வம் ஸிம்ஹத்வம் என்னும் இரண்டு ஜாதிகளை ஒருங்கே கொண்டது மான, வ்யக்திம் — வ்யக்தியை (தோன்றும் ஓர் உருவத்தை), உபாஸே — த்யானம் செய்கிறேன்.

கடிகைத்தடங்குன்றின் மிசையிருந்த அக்காரக் கனியெனப்படும் யோகநரஸிம்ஹ மூர்த்தியை நம் கண்ணெதிரே கொண்டு வந்து நிறுத்துகிறது இந்த ச்லோகரத்னம்.

४)कलित दनुतनय भङ्गं करकमलाभरणवारिजरथाङ्गम् ।
कृतघटिकाचलसङ्गं किमपि महो जयति केतनविहङ्गम् ॥

*(4)* கலிததநுதநய பங்கம் கரகமலாபரணவாரிஜரதாங்கம் ।
க்ருதகடிகாசலஸங்கம் கிமபிமஹோ ஜயதி கேதநவிஹங்கம் ॥

கலிததநுதநயபங்கம் — தநுவின்தனயனான இரணி யனைப்பிளந்ததும், கரகமல ஆபரண— திருக்கைத் தாமரை களுக்கு ஆபரணமாகிய, வாரிஜ ரதாங்கம் — சங்கு சக் கரங்களையேந்தியதும், க்ருத கடிகாசலஸங்கம்— திருக் கடிகை மலையில் பற்றுவைத்துள்ளதும், கேதந விஹங்கம்— கொடியில் கருடனைக் கொண்டதுமான, கிமபிமஹ: — ஒப் பற்ற தேஜஸ்ஸு, ஜயதி — மேம்பட்டு விளங்குகிறது.

கச்யபப்ரஜாபதியின் மனைவிகளில் தநு என்ப வளுக்குப் பிறந்தபிள்ளைகள் தநுஜர்கள் (= தானவர்கள்). திதி என்பவளுக்குப் பிறந்தவர்கள் தைத்யர்கள். இவர்கள் இரு திறத்தாரும் அசுரர்கள். திதியின் பிள்ளையான இரணியனை இங்கு தநுஜனாகக் குறிப் பிட்டது, அசுரத்துவம் என்ற பொதுத் தன்மையானது இரணியனுக்கும் பொருந்துகையால் ஆகும். இங்ஙனம் நூல்களில் தைத்யர்களைதானவர்களாகவும், தானவர் களை தைத்யர்களாகவும் பல விடங்களிலும் கூறப் பட்டுள்ளமை காணத்தக்கது.

५)सर्वरसगन्धभरितं सङ्गतमेकमपि सकलशाखासु ।
अमृतफलमखिलपुंसामास्वाद्यं चित्रमस्ति घटिकाद्रौ ॥

(5)ஸர்வரஸகந்தபரிதம் ஸங்கதமேகமபி ஸகலசாகாஸு ।
அம்ருதபலமகிலபும்ஸாமாஸ்வாத்யம் சித்ரமஸ்திகடிகாத்ரௌ ॥

ஏகமபி — ஒன்றேயாயினும், ஸர்வரஸ கந்தபரிதம்— எல்லாவகையான சுவைகளாலும் எல்லாவிதநறுமணங் களாலும் நிறையப்பெற்றதும், ஸகல சாகாஸு ஸங்கதம்— பல கிளைகளில் தொடர்புகொண்டதும், அகிலபும்ஸாம்— ஆத்மாக்களனைவர்க்கும், ஆஸ்வாத்யம் — சுவைத்து உண்ணத் தக்கதுமாய், சித்ரம் அம்ருதபலம் — (இங்ஙனம்)

விசித்திரமான, **அம்ருதபலம்** — அம்ருதம்போல் தித்திக்கும் பழம் ஒன்று, **கடிகாத்ரௌ அஸ்தி** — திருக்கடிகை மலையில் உள்ளது.

இங்கு ஒரே பழம் பலவகைச்சுவை நறுமணங்கள் நிறையப்பெற்றதும், பலகிளைகளில் தொடர்பு கொண்டதும், அனைவரும் சுவைத்துண்ண வுரியதுமாக இராதாகை யால் முரண்பாடு தோன்றும். இதில் அம்ருதம்போல் தித்திக்கும் பழமாக உருவகித்துக்கூறப்பட்ட கடிகை நரஸிம்ஹப்பெருமானாகிய திருமால் ஒருவனே — சாந்தோக்யோபநிஷத்தில் ஸர்வகந்த: ஸர்வரஸ: என்று எல்லா நறுமணங்களும் எல்லா நற்சுவைகளும் அமையப்பெற்றவனாகக் குறிக்கப்பட்டுள்ளமை யினாலும், வேதமாகிய மரத்தின் கிளைகளாகிய ருக் யஜுஸ் ஸாம அதர் வணங்களென்னும் எல்லாப்பிரிவு களிலும் பரம் பொருளாகக் கூறப்படுவதனாலும், எல்லாரும் தஞ்சம் பற்றி அநுபவிக் கலாம்படி இருக்கை யாலும் முன் தோன்றிய முரண்பாடு நீங்குதல் காண்க. அதாவது உலகிலுள்ள எப்பழமும் முற்கூறியபடி இராதாகிலும், நரஸிம்ஹனாகிய பழம் அப்படியிருப் பதில் தடை யொன்றுமில்லை என்றபடி.

இந்த ச்லோகத்தில் அமுதம் போல் இனிக்கும் பழமென்று திருக்கடிகையெம்பெருமான் குறிக்கப் பட்டுள்ளான். ஆழ்வார்கள் இப்பெருமானை — **அக்காரக் கனி** என்று அழைத்துள்ளார்கள். எறும்பி யப்பா **அம்ருதபலம்** என்று பணித்தருளுகிறார். அக்காரக்கனி என்பதற்கு இரண்டு பொருள்கள். (1) ஸஹகாரக் (ஒட்டுமாங்)கனி, ஸஹகார மென்னும் ஸம்ஸ்க்ருத பதம் தமிழில் அக்காரமென்று ஆகும். ஸந்த்யா என்பது அந்தியென்று ஆனது போல்

இதைக்கொள்க. (2) அக்காரம் — சர்க்கரை. இது தமிழ்ச்சொல். சர்க்கரையே மரமாக முளைத்து அம்மரம் முதன் முதலாகப் பழுத்த பழத்தை அக்காரக்கனி என்பர் வ்யாக்யான சக்ரவர்த்தியான பெரியவாச்சான்பிள்ளை. இவ்விரண்டு வகையிலும், கடிகை யெம்பெருமான் ஒட்டுமாங்கனி போன்றும் சர்க்கரைமரக்கனி போன்றும் மிகமிக இனியவனாகையால் எறும்பியப்பா இவ்வெம் பெருமானை அம்ருதபலம் — அம்ருதம் போல் தித்திக்கும் பழம் என்று அருளிச்செய்தது மிகவும் பொருந்தும்.

६)आरण्यकाप्तवाक्यैरवगम्यो ग्राम्यजनदृशामपदम् ।
स्फुरति घटिकाचलाग्रे पुरुषमृगः कोऽपि पुण्यकृदुपेयः ॥

(6) ஆரண்யகாப்தவாக்யைரவகம்யோ க்ராம்ய ஜநத்ருசாமபதம் ।
ஸ்புரதி கடிகாசலாக்ரே புருஷம்ருக:கோऽபி புண்யக்ருதுபேய: ॥

ஆரண்யக ஆப்தவாக்யை: — ஆரண்யகமென்கிற நம்பத்தக்க வேதபுருஷனுடைய வாக்கியங்களால், அவகம்ய: — உண்டென்று அறியப்படுவதும், க்ராம்ய ஜந த்ருசாம் — (கிராம) பாமரமக்களின் பார்வைகளுக்கு, அபதம் — இலக்காகாததும், புண்யக்ருத்உபேய — புண்ணியம் செய்தவர்களால் அடையத் தக்கதுமான, கோऽபி— ஒரு, புருஷம்ருக: — நரம்ருகமானது (நரஸிம்ஹமானது), கடிகாசல அக்ரே — கடிகை மலையின் உச்சியில், ஸ்புரதி — பளபளவென்று விளங்குகின்றது.

இதிலிருந்து — கிராமமக்களால் க்ராமத்தில் காணமுடியாத— காட்டில்திரிகிற நம்பத்தக்க வேடர் முதலியோர்களின் பேச்சுக்களைக் கொண்டு காட்டிலிருக்கிறதென்று அறியவெளிய — புண்ணியம் செய்த

வர்களுக்குப் பிடிபட்டு அடையத்தக்கதொரு ஆண் சிங்கம் கடிகைமலைச் சிகரத்தில் விளங்குகிறதென்று சாதாரணமானதோர் பொருளும் அறிய இயலும்.

७)महति घटिकाद्रिविषये महता स्नेहेन निर्मलदशायाम् ।
देदीप्यते स्थिरोऽयं दिव्यैर्मुनिभिः प्रवर्तितो दीपः ॥

(7)மஹதி கடிகாத்ரிவிஷயே மஹதாஸ்நேஹேந நிர்மலதசாயாம் ।
தேதீப்யதே ஸ்திரோऽயம் திவ்யைர் முநிபி: ப்ரவர்த்திதோ தீப:॥

மஹதி – பெரிய, கடிகாத்ரி விஷயே – கடிகை மலையாகிய இடத்தில்(அகலில்), மஹதா ஸ்நேஹேந – அதிகமான பக்தியுடன் (நெய்யுடன்). நிர்மல தசாயாம் —மிகவும் சுத்தமான ஸமயத்தில் (அழுக்கற்ற திரியில்), திவ்யை: முநிபி: -மிகவுயர்ந்த ஸப்தருஷிகளால், ப்ரவர்த் தித: – தோற்றுவிக்கப் பட்டதாய்க் (ஏற்றப்பட்ட தாய்க்) கொண்டு, அயம் தீப: – இந்த நரஸிம்ஹப் பெருமானா கிய விளக்கு, ஸ்திர:தேதீப்யதே – நிலையாக ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது.

சாதாரணவிளக்கு ஒரு மனிதனால் அளவு பட்டதோர் அகலில் அளவான நெய்யிட்டுச்சில சாணளவுள்ள திரியில் ஏற்றப்பட்டு, நெய்யும் திரியும் மாண்டுபோனால் அணைந்து விடும். அங்ஙனல்லா மல், ஆற்றல் மிக்க அத்திரிமுதலிய முனிவர்களால், மாளாத தமது பக்தியாகிய அகலில் இட்டு, தமது நல்ல மனநிலையில் அல்லது நல்ல நேரத்தில் ஏற்றப் பட்ட நரஸிம்ஹப்பெருமானாகிய விளக்கு அணையாமல் நிலை பெற்று எப்போதும் ஜ்வலித்துக் கொண்டிருக் கிறதென்க. ஸ்நேஹம் – பக்தியும் நெய்யும், தசா – நேரமும் திரியும்.

८)मुष्णंस्तमो जनानां मूर्धनि घटिकाचलस्य सम्भूतः ।
आलोकतोऽखिलार्थानवगमयति नित्यमच्युतो दीपः ॥

*(8)* முஷ்ணம்ஸ்தமோ ஜநாநாம் மூர்த்நி கடிகாசலஸ்ய ஸம்பூத: ।
ஆலோகதோऽகிலார்த்தாந் அவகமயதி நித்யமச்யுதோ தீப: ॥

கடிகாசலஸ்ய மூர்த்நி — கடிகைமலையின் உச்சியில், ஸம்பூத: — உண்டான, அச்யுத: தீப: — அச்யுதனென்று சொல்லப்பட்ட — அணையாத — விளக்கானது, ஆலோகத: — தன் பார்வையாலே — தன் வெளிச்சத்தினாலே, ஜநாநாம் — மக்களுடைய, தம: — அஜ்ஞானத்தை —இருட்டை, முஷ்ணந் — போக்கு வதாய்க்கொண்டு, அகில அர்த்தாந் —எல்லாப் புருஷார்த்தங்களையும் நித்யம் — எப்போதும், அவகமயதி — அனுபவிப்பிக்கிறது — அறிவிக்கிறது.

விளக்கு தன்வெளிச்சத்தாலே புறவிருளைப் போக்கித் தானிருக்குமிடத்திலுள்ள பொருள்களை நம் கண்களுக்கு அறிவிக்கிறது. எம்பெருமானாகிய விளக்கு தன் கடாக்ஷத்தாலே தமோகுணம் முதலிய அகவிருளைப் போக்கி (தன்னைத் தஞ்சமடையச் செய்து) நமக்கு வேண்டிய ஸகல புருஷார்த்தங்களையும் அனுபவிப்பிக்கிறது. தம: — அகவிருளும் புறவிருளும். அர்த்த:—புருஷார்த்தமும் பொருளும். ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபனான பகவான் இவ்விரண்டு ச்லோகங் களிலும் விளக்காக உருவகிக்கப்பட்டான் என்க. நந்தா விளக்கே என்றார் கலியன்.

९)रस्यं सकृदुपसेव्यं लभ्य मपथ्यसह मसुहितममोघम् ।
त्वरितं हरति भवार्तिं शुद्धं घटिकाद्रिमौलिजं मूलम् ॥

*(9)* ரஸ்யம் ஸக்ருதுபஸேவ்யம்லப்யமபத்யஸஹமஸுஹிதமமோகம் ।
த்வரிதம்ஹரதி பவார்த்திம் சுத்தம் கடிகாத்ரிமௌளிஜம் மூலம் ॥

கடிகாத்ரி மௌளிஜம் — கடிகைமலைச் சிகரத்தில் உண்டான, சுத்தம்மூலம் — நரஸிம்ஹப் பெருமானாகிய தூய்மையான மூலிகையானது, ரஸ்யம் — சுவைக்கத் தக்கது. லப்யம் — கிடைக்கத் தக்கது. அபத்யஸஹம் — பாபமாகிய அபத்யம் எவ்வளவு செய்தாலும் பொறுத்துக்கொள்ளுவது, அஸுஹிதம் — எவ்வளவு உட்கொண்டாலும் போது மென்று தோன்றாதபடி மேன் மேலும் உட்கொள்ளத் தக்கது. அமோகம் — வ்யர்த்த மாகாதது (= பயனையளித்தே தீருமது). ஸக்ருத் உபஸேவ்யம்ஸத் — ஒரு தடவை மட்டுமே உட்கொள்ளப் பட்ட தாய்க் கொண்டு, பவார்த்திம் — பிறவி யென்னும் நோயை, த்வரிதம் ஹரதி — விரைவில் போக்குகிறது.

சாதாரணமான மூலிகை — சுவையுடைய தன்று, எளிதில் கிடைக்காது, அபத்யம் செய்தால் வேலை செய்யாது. ஒரு தடவையுட்கொண்டால் போதும் போதுமென்ற எண்ணத்தையுண்டாக்குமது. சில ஸமயத்தில் பயனளிக்காமலும் போமது. பல நாட்கள் உட்கொண்டால்தான் நோயைத் தீர்க்குமது. எம் பெருமானாகிற மூலிகை இதற்கு நேர் முரணான தென்று இதனால் காட்டப்பட்டதாயிற்று.

ஸுஹிதம் — த்ருப்தம், அஸுஹிதம் — அத்ருப்தம் — த்ருப்திக்கு விஷயமாகாதது. மூலம் — மூலிகை, மருந்து. மருந்தும் பொருளும் அமுதமும் தாமே என்று பேயாழ்வார் அமுதமென்று ரஸ்ய மாகவும், மருந்தென்று மூலிகையாகவும் எம்பெரு மானைக் குறித்தருளினார்.

१०)स्थिरशोकशल्यहरणं जगतां विच्छिन्नकुशलसन्धानम् ।
सञ्जीवनमपि घटिकाशैलजमूलं करोति सारूप्यम् ॥

(10)ஸ்திரசோககசல்யஹரணம் ஜகதாம் விச்சிந்நகுசலஸந்தாநம் ।
ஸஞ்ஜீவநமபி கடிகாசைலஜ மூலம் கரோதி ஸாரூப்யம் ॥

கடிகாசைலஜ மூலம் — கடிகைமலையிலுண் டாகிய, நரஸிம்மனென்னும் மூலிகையானது, ஜகதாம் — உலகிலுள்ளவர்களுக்கு, ஸ்திரசோகசல்யஹரணம்— நிலைநின்ற துன்பமாகிய — அம்புதைத்த விரணத்தை ஆற்றுமதாய், விச்சிந்நகுசல ஸந்தானம் — முறிந்து போன க்ஷேமமாகிய எலும்பை ஒட்டவைக்குமதாய், ஸஞ் ஜீவநம் — நசிக்கவிருக்கும் ஆத்மஸ்வரூபமாகிய உயிரை நசியாமல் பாதுகாக்குமதாய் இருந்து, ஸாரூப்யம்அபி கரோதி — (இறந்த பிறகு) பரமபதத்தில் தன்னோடு ஒத்த திருமேனியையுடைமையாகிய அழகிய உருவ த்தையும் உண்டாக்குகிறது.

சில மூலிகை அம்புபட்ட புண்ணைமட்டும் ஆற்றும். இன்னும் சில முறிந்துபோன எலும்பைச் சேர்த்து வைக்கும். மற்றும் சில போகுமுயிரை மீட்டுத்தரும். வேறு சில—அழகில்லாத உடலை அழகு டையதாக்கும். அக்காரக்கனி யென்னும் ஒரே மூலிகை இவையெல்லாவற்றையும் செய்யுமென்றார் இதனால். இவை முறையே விசல்யகரணீ ஸந்தாந கரணீ ஸஞ்ஜீவகரணீ ஸாரூப்யகரணீ எனப்படும். இவ்விரண்டு ச்லோகங்களாலும் எம்பெருமான் மிக மிகவுயர்ந்த மூலிகையாக உருவகிக்கப்பட்டான்.

११)अतिबलभवाहिदष्टान् अभिलाषविषाग्निमूर्च्छनानष्टान् ।
घटिकाशिखरिनरेन्द्रः घटयत्यसुभिः कटाक्षमात्रेण ॥

(11) அதிபல பவாஹிதஷ்டாந் அபிலாஷவிஷாக்நி மூர்ச்சநாநஷ்டாந் ।
கடிகாசிகரி நரேந்த்ர: கடயத்யஸுபி: கடாக்ஷமாத்ரேண ॥

கடிகாசிகரி நரேந்த்ர: — கடிகைமலையிலுள்ள நரஸிம்ஹ னென்னும் விஷவைத்தியன், அதிபல பவ

அஹி தஷ்டாந் — வலிமைமிக்க — ஸம்ஸாரமாகிய பாம்பினால் கடிக்கப்பட்டவர் களாய், அபிலாஷ விஷ அக்நி மூர்ச்சநா நஷ்டாந் — ஆசையென்னும் நெருப்புப் போன்ற விஷம் ஏறியதனால் மாய்ந்தவர் (களான மனிதர்)களை, கடாக்ஷமாத்ரேண — தனது கடாக்ஷ மாத்திரத்தினால், அஸுபி: — பிராணன்களோடு,கடயதி — சேர்த்துவிடுகிறான் (பிழைக்கச் செய் கிறான்).

உலகில் பிரசித்தரான விஷவைத்தியர்கள் பாம்புகடித்து விஷமேறிமாயவிருக்குமவர்களை, கடித்தவிடத்தில் மருந்துதடவியும் உள்ளுக்கும் மருந்து கொடுத்தும் உயிர்ப்பிக்கிறார்கள். எம்பெருமானோ வெனில் பிறவியென்னும் பாம்பு தீண்டி ஆசையாகிய விஷமேறி ஆத்மநாசமடையுமவர்களை மருந்தொன்று மின்றித் தன் திருக்கண் நோக்கத்தினால் மட்டும் உயிர் களுக்கு ப்ராணனாகிய தன்னோடும், தனக்கு ப்ராணன் களாகிய நித்யஸூரிகளோடும் சேர்த்து உஜ்ஜீவிப் பிக்கிறான். லௌகிக விஷவைத்தியனுக்கும் எம்பெரு மானுக்கும் இதுவே வாசி. நரேந்த்ர: — விஷ வைத்தியன்.

१२)चोरं स्वतश्च्युतं मां स्वामी घटिकाद्रिपो विचिन्वानः ।
दृष्ट्वा कुतोऽप्युपायात् दृप्तमबध्नात् दयागुणेन दृढम् ॥

(12)சோரம் ஸ்வத: ச்யுதம் மாம் ஸ்வாமீ கடிகாத்ரிபோ விசிந்வாந: ।
த்ருஷ்ட்வா குதோக்ப்யுபாயாத் த்ருப்தமபத்நாத் தயாகுணேநத்ருடம் ॥

ஸ்வாமீ கடிகாத்ரிப: — தலைவனான கடிகை மலையரசன், சோரம் — தனது சொத்தான என்னை, எனது சொத்தென்று நினைத்துத் திருடியவனாய், த்ருப்தம் — கொழுப்புடையவனாய், ஸ்வத:ச்யுதம் —

தன்னிடமிருந்து நழுவிய, மாம் — என்னை, விசிந்வாந: ஸந் — ஓயாமல் தேடிக்கொண்டேயிருந்து, குதோபி உபாயாத் — ஏதோவொரு தந்திரத்தினால், த்ருஷ்ட்வா— கண்டுகொண்டு, தயாகுணேந — தயை யென்னும் நற்பண்பாகிய கயிற்றால், த்ருடம் அபத்நாத் — இறுக்கிக் கட்டிவிட்டான்.

அரசன் தன்சொத்தைத் திருடிக்கொண்டு ஓடியவனை ஏதோவொரு சூழ்ச்சி செய்து கண்டு பிடித்துக் கயிற்றால் கம்பத்தில் கட்டுவான். எம்பெரு மான், ஸ்வதந்த்ரனாய்த் தன்னைவிட்டு அகன்ற கொழுத்த திருடனான ஜீவாத்மாவை, அஜ்ஞாத ஸுக்ருதமாகிய ஒரு தந்திரத்தைக் கற்பித்து அவனைக் கடாக்ஷித்து, தனது தயையாகிய கயிற்றால் தன்னோடு சேர்த்துக் கட்டிக்கொண்டு விடுகிறான். அவனைப் பின்பு ஒருகாலும் விடுவதில்லை.

அஜ்ஞாதஸுக்ருதமாவது — பொல்லாத ஜீவாத்மா ஒருவன் தனக்கும் தெரியாமல் செய்த நல்லகாரியம். அதாவது பசுவைக்கொல்லுவதற்காக அதனைத் துரத்திக் கொண்டு போய், அப்பசு ஒரு கோயிலை வலம் செய்து கொண்டு ஓடிப்போக, அதனைப் பிடிக்கத்தானும் அக்கோயிலை வலம் செய்து கொண்டு செல்லுதல் முதலியவை. எம் பெருமான் இவனை இப்படியே விட்டு விட்டால் மேலும் இப்படியே கொடுந்தொழில் புரிந்துகொண்டு தானும் கெட்டு உலகையும் அழித்துவிடுவா னென்று நினைத்துத் தனது அபாரகருணையினால், இவன் அக் கோயிலை வலம் செய்ததை நல்ல காரியமாக — புண்ணியமாகக் கணக்கிட்டு இவனைக் கடாக்ஷித்து

இவனுக்கு மோக்ஷமளித்துத் தன்னோடு சேர்த்துக் கொண்டு மறுபடியும் அவனை இப் பூமண்டலத்திற்கு ஒரு நாளும் திருப்பியனுப்புவதில்லை என்னும் விஷயம் இந்த ச்லோகத்தில் நூலாசிரியரால் அருளிச் செய்யப் பட்டிருத்தல் நோக்கத் தக்கது.

குணம் — நற்பண்பும், கயிறும்.

१३)विमलकपिसेव्यमाना विलसितसन्निहित शङ्खचक्राब्जा ।
काऽपि घटिकाद्रिशिखरे करुणारसपूरनिर्भरा सरसी ॥

13)விமலகபிஸேவ்யமாநா விலஸிதஸந்நிஹித சங்கசக்ராப்ஜா ।
காऽபி கடிகாத்ரிசிகரே கருணாரஸபூரநிர்ப்பரா ஸரஸீ ॥

விமலகபிஸேவ்யமாநா — (கிழக்கில்) அழுக்கற்ற மனமுடைய ஆஞ்ஜநேயனென்னும் குரங்காகிய — பளிச்சென்ற சூரியனாலே ஸேவிக்கப் பெற்றதாய் —(ஒளி வீசப் பெற்றதாய்) அதனாலே, விலஸித ஸந்நிஹித சங்க சக்கர அப்ஜா — மலர்ச்சி யடைந்த, தன்னிடமுள்ள சங்கு சக்கரங்களென்னும் தாமரை மலர்களையுடையதாய், கருணா ரஸபூர நிர்ப்பரா — கருணையென்னும் நீர்வெள்ளம் நிறையப் பெற்றது மான, காபி ஸரஸீ — ஒரு குளம், கடிகாத்ரி சிகரே — கடிகைமலைச் சிகரத்தில், அஸ்தி — இருக்கிறது.

குளத்தில் நீர் நிறைந்திருக்கும். சூரியகிரணம் பட்டு அதன் கண் உள்ள தாமரைமலரும். எம்பெரு மானிடம் தயை நிறைந்திருக்கும். கிழக்கே சிறிய மலை யில் விளங்குகிற அனுமானாலே ஸேவிக்கப் பட்டு, எம்பெருமான்கையில் விளங்குகின்ற சங்கு சக்கரங் கள் புத்துயிர் பெற்று ஜ்வலிக்கும் என்றபடி. இதில் நரசிங்கப்பெருமான் தாமரைத்தடாகமாக உருவகிக் கப்பட்டான். கபி: — குரங்கும், சூரியனும்.

१४)निर्मुक्तभोगशुद्धान् नित्यमहीनान् वहन् निजासक्तान् ।
भाति घटिकाद्रिशिखरे भद्रश्रीः कोऽपि परिमली शाखी ॥

*(14)*நிர்முக்தபோககசுத்தாந் நித்யமஹீநாந்வஹந் நிஜாஸக்தாந் ।
பாதி கடிகாத்ரிசிகரே பத்ரஸ்ரீ: கோऽபி பரிமளீ சாகீ ॥

கடிகாத்ரி சிகரே – *கடிகைமலையின் சிகரத்தில்,* *(1)*பரிமளீ – *நறுமணம் நிறைந்து,* பத்ரஸ்ரீ: – *மங்கள கரையான ஸ்ரீமஹாலக்ஷ்மியை உடைய,* சாகீ – *வேத சாகைகளை ப்ரமாணமாகக் கொண்ட,* கோऽபி – *ஒப்பற்ற எம்பெருமானாகிற,* *(2)* பரிமளீ – *பரிமளம் மிக்கு,* பத்ரஸ்ரீ: – *சந்தனமரமாகிய,* கோऽபி சாகீ – *ஒரு மரமானது* *(1)* நிர்முக்தபோககசுத்தாந் – *இஹலோக பர லோக போகங்களை விட்டதனால் பரிசுத்தர்களாய்,* நிஜஆஸக்தாந் – *தன்னிடம் மிக்கபற்றுள்ளவர்களாய்,* அஹீநாந் – *அவ்விரண்டும் காரணமாகத் தன்னால் விடப்படாத பக்தர்களாகிய* – *(2)* நிர்முக்த போக சுத்தாந் – *தோலையுரித்ததனால் அழுக்கற்ற உடலைக் கொண்ட வைகளாய்,* நிஜ ஆஸக்தாந் – *தன்னோடு சேர்ந்தே யிருக்கிற (- தன்னைச்சுற்றிக்கொண்டிருக்கிற)* அஹீந ாந் – *ஸர்ப்பச்ரேஷ்டங்களை,* நித்யம் வஹந் பாதி – *(1) எப்போதும் பரமபதத்துக்கு அனுப்பிக் கொண்டே விளங்குகிறது. (2) எப்போதும் சுமந்து கொண்டே விளங்குகிறது.*

*எம்பெருமானாகிய ஒரு மரம் பக்தர்களாகிய ஸர்ப்பச்ரேஷ்டங்களை வஹித்துக்கொண்டே விளங்கு கிறதென்று அந்வயித்துக் கொள்க. எம்பெருமானுக் கும் மரத்துக்கும் பொதுவாக இடப்பட்ட விசேஷணங் கள் சிலேடை வகையில் அமைந்துள்ளமை காண்க.*

**போகம்** – அனுபவமும் பாம்பினுடலும். **அஹீநா:** – தன்னால் விடப் படாதவர்களும் உயர்ந்த பாம்பு களும், **வஹந்** – அனுப்புமவனும் சுமப்பதும். **பத்ரஸ்ரீ:** – மங்களமான லக்ஷ்மியை உடையவனும், சந்தன மரமும், சாகீ – வேதத்தின் பிரிவுகளாகிய ருக் முதலி யவைகளை ப்ரமாணமாகக் கொண்டவனும், கிளை களையுடைய மரமும். மற்றவை விளங்குமவையே.

१५)करुणामृतरसवर्षैः घटिकाचलघटितकृष्णमेघ ! निजैः ।
संसरणतरणितप्तं सञ्जीवय विनतसस्यजालमिदम् ॥

**(15) கருணாம்ருதரஸவர்ஷை: கடிகாசலகடிதக்ருஷ்ணமேக! நிஜை: ।**
**ஸம்ஸரணதரணிதப்தம் ஸஞ்ஜீவய விநதஸஸ்ய ஜாலமிதம் ॥**

ஹே! கடிகாசல கடித க்ருஷ்ணமேக – வாராய் கடிகைமலையில் (வந்து) சேர்ந்த – அல்லது ஸப்தர்ஷி களால் (கொண்டு) சேர்க்கப்பட்ட கார்மேக மாகிய பெருமானே! நிஜை: – உனக்கு இயற்கையாக அமைந்த, **கருணா அம்ருதவர்ஷை:**– கருணையாகிய அமுதமழை யினால் – ஸம்ஸரண தரணிதப்தம் – ஸம்ஸாரமாகிய சூரியனால் கொளுந்திச் சாவியாகப்போன, இதம் – இந்த, விநதஸஸ்யஜாலம் – (உனது) பக்தர்களாகிய பயிர்களின் தொகுதியை, ஸஞ்ஜீவய – உயிர்ப்பிக்க வேண்டும்.

இதில் எம்பெருமானை மேகமாகவும் அவனது கருணையை அமுதமழையாகவும் பிறவித் தொடர்ச்சி யாகிய ஸம்ஸாரத்தை சூரியனாகவும் பக்தர்களைப் பயிராகவும் உருவகித்துள்ளார். சூரியன் பயிர்களை வாட்ட, அப்போது அவை சாவியாகப் போகாமல் மேகம் வந்து தோன்றி ஒருபாட்டம் மழையைச்

சொரிந்து அப்பயிர்களை நனைத்து உயிர்ப்பிக்குமாப் போலே, எம்பெருமானே! உன்னை வணங்கிய பக்தர் களாகிய அடியேன் போன்றவர்கள் ஸம்ஸாரத் தினால் தபிக்கப் பெற்று ஸ்வரூப நாசமடையாநிற்க, நீ வந்து தோன்றி உனது இயற்கை யான கருணை மழையைப் பெய்வித்து உன் பக்தர்களை உஜ்ஜீ விப்பித்தருள வேண்டும் என்று இதனால் ப்ரார்த்தித்தபடி.

१६)विमलतरभक्तिपूरे व्यपगतपङ्के विकस्वराम्बुरुहे ।
मानससरसि मुनीनां रमते घटिकाद्रिराजहंस! भवान् ॥

16)விமலதரபக்திபூரே வ்யபகதபங்கே விகஸ்வராம்புருஹே ।
மாநஸஸரஸி முநீநாம் ரமதே கடிகாத்ரிராஜஹம்ஸ! பவாந்॥

ஹே! கடிகாத்ரி ராஜஹம்ஸ — கடிகை மலையி லுள்ள ராஜஹம்ஸமாகிய எம்பெருமானே! பவாந் — தேவரீர், வ்யபகதபங்கே — காமம் குரோதம் (= ஆசை கோபம்) முதலிய அழுக்காகிய சேறு நீங்கப்பெற்றதும், விமலதரபக்திபூரே — மிகவும் நிர்மலமான பக்தியாகிய நீர் வெள்ளத்துக்கு இடமானதும், விகஸ்வர அம்புருஹே — மலர்ந்த ஹ்ருதய கமலமாகிய தாமரைமலரை யுடையது மாகிய, முநீநாம்மானஸஸரஸி — முனிவர்களுடைய மனஸ்ஸாகிய மாநஸஸரஸ்ஸில், ரமதே — விளையாடுகிறீர்.

ஹம்ஸம் சேறற்றுத் தூயநீரையுடையதாய்த் தாமரைகள் மலரப் பெற்றதான மாநஸஸரஸ்ஸில் விளையாடும். எம்பெருமான் காமக்ரோதாதிகள் நீங்கப்பெற்றுத் தூய்மையான பக்தியையுடையதாய் — ஹ்ருதயகமலம் மலரப்பெற்ற — முனிவர்களுடைய மனஸ்ஸில் ஆசையோடு இருப்பான் என்றதாயிற்று.

மாநஸ ஸர: — (1) மனமாகிய ஸரஸ்ஸு (தடாகம்) (2) ஹிமயமலையிலுள்ள மாநஸ மென்கிற ஸரஸ்ஸு. ராஜஹம்ஸம்—ஹம்ஸராஜம் = உயர்ந்தஜாதி ஹம்ஸம். அதன் மூக்கும் கால்களும் சிவந்து உடல் வெளுத்திருக்குமாம்

१७)स्तम्भो हि विघ्नकारी सन्दृष्टो जगति सर्वकार्येषु ।
दानवविदारणे ते तस्यैव हरे कथं नु साचिव्यम् ॥

(17) ஸ்தம்போஹி விக்நகாரீ ஸந்த்ருஷ்டோ ஜகதி ஸர்வகார்யேஷு ।
தாநவவிதாரணே தே தஸ்யைவ ஹரே கதம் நு ஸாசிவ்யம் ॥

ஹரே! — சிங்கப்பிரானே! ஜகதி — உலகில், ஸ்தம்ப: — கம்பமானது, ஸர்வகார்யேஷு — எல்லாக் காரியங்களிலும், விக்நகாரீ ஹி — தடைசெய்யுமதாக அல்லவா, ஸந்த்ருஷ்ட: — காணப்பட்டுள்ளது. தே — உனக்கு, தாநவவிதாரணே — தானவனான ஹிரணியனைப் பிளக்கும் காரியத்தில், தஸ்ய ஏவ — எல்லோ ருக்கும் தடை செய்யும் கம்பத்திற்கே, ஸாசிவ்யம் — ஸஹாய மாக இருக்கும் தன்மை, கதம் நு ஜாதம் — எப்படித் தான் உண்டாயிற்று.

எல்லோருக்கும் தடைசெய்யும் கம்பம் நரசிங்கப் பெருமாளுக்கு ஹிரண்யனைக் கொல்வதற்காக முன்பே ஒளிந்துகொள்ளும் படி இடங்கொடுத்து உதவி செய்ததே அது எப்படி என்று கேட்டாராயிற்று. ஸ்தம்ப் — ப்ரதிகாதே என்ற தாதுவிலிருந்து உண்டான ஸ்தம்பம் என்ற சொல், தடை செய்வது என்ற பொருளைத் தெரிவிக்கும்.

१८)देवत्वमागमात् ते सिद्धं तिर्यक्त्वमपि नरत्वेन ।
सह दृष्टमद्य घटिकास्थावर! सर्वात्मकस्य किमयुक्तम् ॥

(18)தேவத்வமாகமாத் தே ஸித்தம் திர்யக்த்வமபி நரத்வேந ।
ஸஹ த்ருஷ்டமத்ய கடிகாஸ்தாவர ! ஸர்வாத்மகஸ்ய கிமயுக்தம் ॥

கடிகா ஸ்தாவர — கடிகைமலையில் தாவரமாய் அசையாது உறையும் பெருமானே! தே — உனக்கு, தேவத்வம் — தேவதையாக இருக்கும் தன்மை, ஆகமாத் ஸித்தம் — வேதத்திலிருந்து அறியப்பட்டுள்ளது. நரத்வேந ஸஹதிர்யக்த்வம்அபி — மனிதத்தன்மையோடு விலங்கின் (சிங்கத்தின்) தன்மையும், அத்ய — இப்போது, (உனது உருவத்தில்) த்ருஷ்டம் — காணப்பட்டிருக்கிறது. ஸர்வாத்மகஸ்ய — தேவர் விலங்கு மனிதர் தாவரம் ஆகிய எல்லா முகமாக (= எல்லா வற்றையும் சரீரமாகக் கொண்டு ) இருக்கிற. தே — உனக்கு, கிம்அயுக்தம் — எது தான் பொருந்தாதது.

இவ்வண்டத்திலுள்ள தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரங்களெல்லாவற்றிலும் உட்புகுந்து நின்று அவையெல்லாம் தானே என்னும்படியுள்ள திவ்யாத்ம ஸ்வரூபத்தையுடைமையாகிய ஆச்சரியமான தன்மையையுடைய நரசிங்கப்பெருமானுக்குத் தன் திருமேனியொன்றில் மட்டும் முற்கூறிய நான்குவிதமான தன்மைகளைக் காட்டிக் கொண்டிருப்பது ஆச்சரியமானதன்று, பொருத்தமுடையதே என்றாராயிற்று.

१९)पञ्चास्यएवहि त्वं प्रथितो भगवन्! कथं सहस्रास्यः।
घटिकाद्रिपक्षपाती ख्यातोऽसि कथं च विश्वसाक्षीति ॥

(19)பஞ்சாஸ்யஏவஹி த்வம் ப்ரதிதோ பகவந்! கதம் ஸஹஸ்ராஸ்ய:।
கடிகாத்ரி பக்ஷபாதீ க்யாதோऽஸி கதஞ்ச விச்வஸாக்ஷீதி ॥

பகவந் — பரமபூஜ்யனான எம்பெருமானே, த்வம் — தேவரீர், பஞ்சாஸ்யஏவஹி — ஐந்துமுகமுடையவராகவேயன்றோ, ப்ரதித:— பிரசித்தராயிருப்பது, (அப்படியிருக்க) ஸஹஸ்ரஆஸ்ய:(இதி ஏதத்) — ஆயிரமுகமுடை

யவர் என்னுமிது, கதம்—எப்படி? ச — மேலும், கடிகாத்ரி பக்ஷபாதீ த்வம்—கடிகைமலையின்கண் பக்ஷபாதம் (= ஒருதலையில் மட்டும் வைக்கும் அன்பு) உடைய தேவரீர், விச்வஸாக்ஷீஇதிஏதத் — எல்லோரிடமும் ஸமமான அன்பு வைத்து ஸாக்ஷி சொல்லுமவர் என்னுமிது, கதம் — எப்படி?

ஐம்முகமுடையவன் ஆயிரமுகமுடையனாவதில் முரண்பாடு தோன்றும். பஞ்சாஸ்ய: என்பதற்கு விசாலமான முகமுடையஸிம்ஹம் என்று பொருள். ஸிம்ஹமாக அவதரித்த விஷ்ணு ஆயிரமுகமுடையவராக இருப்பதில் முரண்பாடு ஏதுமில்லையென்று பரிஹாரம். கடிகாசலத்தில் பக்ஷபாதமுடையவன், அதற்குமட்டுமன்றோ ஸாக்ஷியாக இருக்க வேண்டும்? எல்லோருக்கும் ஸாக்ஷியாக இருப்பது எங்ஙனமென்று விரோதம் தோன்றும், விச்வஸாக்ஷி என்பதற்கு எல்லாவற்றையும் நேராகப் பார்ப்பவர் என்று பொருள். கடிகைமலையில் மட்டும் பற்றுடைய பெருமான் எல்லாவற்றையும் நேராகப் பார்க்க முடியுமாகையால் விரோத பரிஹாரம். சிலேடையுள்ள சொற்களையமைத்து வேடிக்கையாகக் கேள்வி கேட்டபடி இது.

२०)बहुदेशमल्पदेशादपि सिंहत्वादधः स्थितं पुंस्त्वम् ।
मूर्तौ तवात्र नृहरे मुख्यः कोवाऽवगम्यतेऽन्येन ॥

20)பஹுதேசமல்பதேசாதபி ஸிம்ஹத்வாத் அத:ஸ்திதம் பும்ஸ்த்வம் ।
மூர்த்தௌ தவாऽத்ர ந்ருஹரே முக்ய: கோவாऽவகம்யதேऽந்யேந ॥

ந்ருஹரே — நரசிங்கப்பெருமானே! தவ அத்ர மூர்த்தௌ — தேவரீருடைய இந்தத் திருமேனியில், அல்பதேசாத் — குறைந்த இடத்தில் (தலையில் மட்டும்)

உள்ள, ஸிம்ஹத்வாத் அபி — சிங்கத்தின் தன்மையை விடவும், அத:ஸ்திதம் — தலையின் கீழ் (உடல் முழுதும்) உள்ள, பும்ஸ்த்வம் — புருஷனது தன்மை, பஹு தேசம் — அதிகமான இடத்தில் உள்ளது. (இப்படியிருக்க) அந்யேந — வேறொருவனால், அத்ர — இவ்விரண்டு தன்மைகளில், கோவா — எதுதான், முக்ய: — முக்கியமென்று, அவகம்யதே — அறியப்படுகின்றது.

இக்கேள்விக்குவிடை: - தலையில் மட்டும் உள்ள ஸிம்ஹ த்வத்தைவிட உடல் முழுதுமுள்ள புருஷத்வமே முக்கியமென்று தோன்றும். ஆனால் முக்யம் என்பது முகத்திலுள்ளது என்று பொருள் பட்டு, முகத்திலுள்ளது ஸிம்ஹத்வமேயன்றிப் புருஷ த்வமன்று. அதனால் ஸிம்ஹத்வமே முக்கியம் என்று ஆராய்ந்தால் தோன்றும். மேலுள்ள ச்லோகத்தில் இது தலைகீழாவது காணீர்.

२१)पुंसूक्तपूर्वकैस्तैः पुरुषत्वं मुख्यमेव ते विदितम् ।
कथमियममुख्यतास्मिन् घटिकाद्रिमनुजमृगराज ॥

21)பும்ஸூக்தபூர்வகைஸ் தை: புருஷத்வம் முக்யமேவ தே விதிதம் ।
கதமியமமுக்யதாऽஸ்மிந் கடிகாத்ரி மநுஜம்ருகராஜ ॥

கடிகாத்ரி மநுஜம்ருகராஜ — கடிகை மலையிலுள்ள நரசிங்கப் பெருமானே! தை: — பிரசித்தமான, பும்ஸூக்தபூர்வகை:-புருஷஸூக்தம் முதலிய வேதபாகங்களாலே, தே புருஷத்வம் — தேவரீருடைய புருஷத்வமானது, முக்யமேவ — முக்கியமானதாகவே, விதிதம் — அறியப்பட்டுள்ளது. (இப்படியிருக்க) அஸ்மிந் — இந்தப் புருஷத்வத்தில், இயம் அமுக்யதா — இந்த அமுக்யத்வமானது, கதம் — எப்படி, கடதே — பொருந்தும்?

முக்யத்வமானது — பிரதானமாயிருக்குந் தன்மை யென்றும், முகத்திலுள்ளமை என்றும் இரு வகைப் படும். கீழ்ச்லோகத்தில் முகத்திலுள்ளமை என்ற பொருளைக் கொண்டு ஸிம்ஹத்வமே முகத்திலுள்ள படியால் அதுவே முக்யமாயிருக்கத் தகுமென்று குறிப் பாகக் காட்டினார். இந்த ச்லோகத்தில் ப்ரதானத்வம் என்ற பொருளைக்கொண்டு, புருஷஸூக்தாதி களில் கூறியபடியினால் புருஷத்வமே முக்கிய மென்று ஸ்பஷ்டமாகக் காட்டினார். ப்ரதானமான புருஷத்வ மாவது—பத்த—முக்த—நித்யர்களிடமுள்ள புருஷத்வத் தைக் காட்டிலும் உயர்ந்த புருஷத்வம் என்றபடி, புருஷோத்தமனிறே எம்பெருமான். புருஷத்வத்திற்குப் புருஷஸூக்தாதிகளில் ப்ரதானத்வரூபமான முக்ய த்வம் கூறப்பட்ட போதிலும் முகத்திலுள்ளமையாகிய முக்யத்வம் ஸிம்ஹத்வத்திற்கே என்பதை இங்குக் குறிப்பாகக் காட்டியபடி. இவ்விரண்டு ச்லோகங் களிலும் கவியின் சமத்காராதிசயம் தோன்றுவது காண்க.

२२)विदधति न भाग्यलक्ष्मीविरहविलासात्तविक्रिया मनुजाः ।
श्रवणामृतेषु घटिकाशैलवनप्रिय! वचस्सु ते श्रद्धाम् ॥

22)விதததி ந பாக்யலக்ஷ்மீவிரஹவிலாஸாத்த விக்ரியா:மநுஜா:।
ச்ரவணாம்ருதேஷு கடிகாசைலவநப்ரிய !வசஸ்ஸு தே ச்ரத்தாம். ॥

கடிகாசைல வனப்ரிய - கடிகைமலைக் காட்டை விரும்பியுறையும் பெருமானே! பாக்ய லக்ஷ்மீ விரஹ — அத்ருஷ்டமென்னும் செல்வமில்லாமையின், விலாஸ ஆத்தவிக்ரியா: மநுஜா: — திருவிளையாடலால் மனவேறு பாடு கொண்ட மனிதர்கள், ச்ரவண அம்ரு தேஷு —

செவிக்கு அமுதம் போல் இனிய, தே வசஸ்ஸு - தேவரீருடைய ஸ்ரீ ஸூக்திகளில், ச்ரத்தாம் — நம்பிக்கையை, ந விதததி — வைப்பதில்லை.

பாக்யமற்றவர்கள்— மேன்மேலும் ஸம்ஸாரத்திலேயே வருந்துவதற்கு உறுப்பாகக் காமம் குரோதம் முதலிய மாறுபட்ட எண்ணங்களையே எண்ணி நசித்துப்போகிறார்கள். நரசிம்மப் பெருமாளுடைய சரமச்லோகத்தில் நம்பிக்கை வைத்து அதன்படி நடந்து மோக்ஷம் பெறுகிறார்களில்லை என்று கவி தம்முடைய வருத்தத்தைத் தெரிவிக்கிறார் இதனால். **'ஸத்யம் ப்ரவீமி மநுஜா: ஸ்வய மூர்த்வ பாஹு: யோ மாம் முகுந்த நரஸிம்ஹ ஜநார்த்தநேதி, ஜீவந் ஜபத்யநுதிநம் மரணே ருணீவ பாஷாணகாஷ்ட ஸத்ருசாய ததாமி முக்திம்'** என்பது நரஸிம்ஹப் பெருமானருளிய சரமச்லோகம்.

மனிதர்களே!நான் கையை உயரத்தூக்கி ஸத்யமாகச் சொல்லுகிறேன். (ஊக்கமாகக் கேளுங் கள்) யாவனொருவன் ஜீவித்திருக்கும் போது, என்னை — முகுந்த நரஸிம்ஹ ஜநார்த்தந (மோக்ஷபூமியைத் தருமவனே, நரஸிம்மனே, துஷ்டஜநங்களையழிப்பவனே) என்று, தினந்தோறும் ஜபம் செய்கிறானோ அவன் திறத்தில் நான் கடன் பட்டவன் போல் இருந்து, அவன் மரணமடையும்போது, கல்லைப் போன்றும் கட்டையைப் போன்றும் நினைவற்றுக் கிடக்கிற அவனுக்கு மோக்ஷத்தை அளிக்கிறேன், என்பது இதன் பொருள். வசஸ்ஸு என்ற பஹு வசனத்தினால் வராஹ சரமச்லோகம், ஸ்ரீராமசரமச்லோகம், ஸ்ரீக்ருஷ்ணசரமச்லோகம், ஆகியவற்றையும் கொள்ளக் குறையில்லை.

२३) कार्यं हिरण्यहरणं घटिकाचललुब्ध! कंसहरणं वा ।
अहरस्त्वमाश्रितानां हन्त किमखिलान्यनर्थजालानि ॥

**(23)** காா்யம் ஹிரண்யஹரணம் கடிகாசலலுப்த! கம்ஸ ஹரணம் வா।
அஹரஸ் த்வமாச்ரிதாநாம் ஹந்த கிமகிலாந்யநர்த்தஜாலாநி ॥

கடிகாசலலுப்த -- கடிகைமலையில் பற்றுள்ள பெருமானே! காா்யம் — உன் காரியம், ஹிரண்ய ஹரணம் — ஹிரண்யனை அழிப்பது, அதவா — அல்லது, கம்ஸ ஹரணம் — கம்ஸனை மாய்ப்பது. இங்ஙனமிருக்க, த்வம்— நீ, ஆச்ரிதாநாம் — உன்னைத் தஞ்சமடைந்தவர்களுடைய அநர்த்த ஜாலாநிஅகிலாநி —துக்க ஸமூஹங்கள் அனைத்தையும், கிம்அஹர: — ஏன் போக்கினாய். ஹந்த — கஷ்டம். ஹரணம் — அழித்தல்.

உருவமுடைய அசுரரைமாய்ப்பது தகுதியுடையது. உருவற்ற துக்கத்தைமாய்ப்பது தகுதியுடையதன்றே என்பது கேள்வி. உருவமுடையது உருவமற்றது என்பதில் வாசியில்லை எம்பெருமானுக்கு. தன்னை யடைந்தவர்களுக்கு விரோதியான கம்ஸஹிரண் யாதிகளை அழித்தாப் போல் அவர்களுக்கு விரோதியான ஸம்ஸாரதுக்கத்தையும் அழித்தானென்பது விடை. தஞ்சம் பற்றிய பக்தர்களை மோக்ஷமடைய வொட்டாமல் தடை செய்கின்றதன்றோ அவர்கள் அனுபவிக்கிற ஸம்ஸாரதுக்கம்.

இங்கு, லுப்தன் — பேராசைகொண்டவன், ஹிரண்யம் — பொன், கம்ஸம் — வெண்கலம், ஹரணம் — திருடுதல் என்று பொருள் கொண்டால், அடே பேராசைகொண்டவனே! உன் வேலை பொன்னைத் திருடுதல் அல்லது வெண்கலத்தைத் திருடுதலாயிருக்க,

ஐயோ துக்கத்தை ஏனப்பா திருடினாய் அதனால் உனக்கு ஒரு லாபமுமில்லையே என்று வேடிக்கையாக மற்றொருபொருளும் தோன்றுதல் காண்க.

२४)दोषा ममान्तरहिताः स्वामिन् घटिकेन्द्र तावकाश्च गुणाः।
तदपि गुणैस्त्वदुपगतैः स्थाने हीनाश्रिता जिता दोषाः॥

(24)தோஷா மமாந்தரஹிதா: ஸ்வாமிந்கடிகேந்த்ர தாவகாச்ச குணா: ।
ததபி குணைஸ்த்வதுபகதை: ஸ்தாநே ஹீநாச்ரிதா ஜிதா தோஷா: ॥

கடிகேந்த்ர — கடிகைமலையரசனான, ஸ்வாமிந் — ஸ்வாமியே, மம தோஷா: — என்னுடைய குற்றங்கள், அந்தரஹிதா: — எல்லையில்லாதவை. தாவகா: குணா: ச — உன்னுடையவைகளான குணங்களும், அந்த ரஹிதா: — எல்லையில்லாதவை. தத்அபி— ஆயினும், த்வத் உபகதை: — பெரியவனான உன்னையடைந்த, குணை: — குணங்களால், ஹீந ஆச்ரிதா: — தாழ்ந்தவனான என்னையடைந்த, தோஷா: — குற்றங்கள், ஜிதா: — வெல்லப்பட்டன. ஸ்தாநே— இது யுக்தம்தான்.

குணங்களும் குற்றங்களும் எல்லையற்றவை யென்றால் ஒன்றை மற்றொன்று வெல்லமுடியாது. ஆயினும் குணங்கள் உன்னை அண்டை கொண்ட வலிமையால் என் தோஷங்களை வென்றன என்றபடி. அல்லது, குணங்கள் குற்றங்கள் என்று சாதாரண மாக எடுத்துக் கொண்டால் குணங்களைவிடக் குற்றங்களே வலிமையுடையன. ஆகிலும் குணங்கள் உன்னைப் பற்றியிருக்கிற பெருமையினாலே வலிமை பெற்று, என்னைப் பற்றியிருக்கிற சிறுமையினாலே வலிமையிழந்த குற்றங்களை வென்று விட்டன— என்றும் கொள்ளலாம்.

२५)पादाम्बुजेन लसता प्रसृमरमधुना परार्ध्य गन्धेन ।
श्रयतां शमयसि घटिकाशैलप! विपरीतवासनाः सकलाः ॥

25)பாதாம்புஜேந லஸதா ப்ரஸ்ருமரமதுநா பரார்த்ய கந்தேந ।
ச்ரயதாம் சமயஸி கடிகாசைலப! விபரீதவாஸநாஸ் ஸகலா: ॥

கடிகாசைலப — கடிகைமலைத்தலைவனே! ப்ரஸ்ருமர மதுநா — பெருகுகின்ற தேனையுடையதும், பரார்த்ய கந்தேந — சிறந்த நறுமணமுடையதும் ஆகி, லஸதா — விளங்குகிற, பாதஅம்புஜேந — திருவடித் தாமரையினால், ச்ரயதாம் — உன்னைத் தஞ்சமாகப் பற்றியிருப்பவருடைய, ஸகலா:-விபரீதவாஸநா: — எல்லா வகையான — மாறுபட்ட விஷயப் பற்றுகளையும், சமயஸி — தணியச்செய்கிறாய்.

எம்பெருமான் தேன் வெள்ளமிடுவதும் கம கம வென்று பரிமளிப்பதுமான தனது திருவடியை பக்தர்கள் அனுபவிக்கும்படி செய்து அதில் பற்றை யுண்டாக்கி, அப்பற்றுக்கு விரோதியாய் இதற்கு முன்பிருந்த — அவர்களுடைய துர்விஷயப் பற்றாகிய துர்க்கந்தத்தைத் தணிக்கிறான் என்றபடி.

२६)प्रगुणोदयं प्रसादं प्राप्ता निपुणेन पदविदा ग्रथिता ।
सुतरां त्वयैव घटिकानायक शोभेत सूक्ति हारलता ॥

(26)ப்ரகுணோதயம் ப்ரஸாதம் ப்ராப்தா நிபுணேந பதவிதா க்ரதிதா ।
ஸுதராம் த்வயைவ கடிகாநாயக சோபேத ஸூக்திஹாரலதா ॥

கடிகாநாயக — கடிகைமலையில் எழுந்தருளி யுள்ள நாயகனே! (—தலைவனே!) ப்ரகுண உதயம் — சிறந்த (1)மென்மை செவிக்கினிமை முதலிய

(2)குளிர்த்தி பளபளப்பு முதலிய–குணங்களின் தோற்றத்தைப் பெற்ற, ப்ரஸாதம் – (1) எளிமையாகப் பொருள் புரிதலை (2) அழுக்கற்றுத் தெளிவா யிருத்தலை, ப்ராப்தா – அடைந்ததும், நிபுணேந – ஸமர்த்தனான, பதவிதா - (1) வ்யாகரணசாஸ்த்ர மறிந்தவனாலே (2) கோக்குமிடமறிந்தவனாலே, க்ரதிதா– (1) சொல்லோடுசொல் (2) முத்தோடு முத்து சேர்க்கப்பட்டதுமான, ஸூக்தி ஹாரலதா - அடியே னுடைய (நல்வார்த்தைகள் பொருந்திய) (1) ச்லோக வரிசையாகிய (2) முத்துமாலையானது, த்வயா ஏவ – உன்னாலேயே, சோபேத - ஒளிபெறுவ தாகும்.

கவிதாம் இயற்றும் ச்லோகவரிசையை முத்து மாலையாக உருவகம் செய்கிறார் இதனில். இரண்டிற் கும் உரிய அடைமொழிகளை சிலேடை வகையில் அமைத் திருக்கிறார். பதவுரையில் (1) என்று குறித்தவற்றை ச்லோகங்களுக்கும், (2) என்று குறித்தவற்றை முத்து மாலைக்கும் தொடர்பு படுத்துக. ச்லோகத்திற்கு குண மாவன – கடகடவென்றிராமல் மெத்தென்றிருத்தலும் இனிமையும் சப்தாலங்காரமும் அர்த்தாலங்காரமும் பிறவும் ஆம். முத்துக்குக் குளிர்த் தியும் அணியுமவர் கழுத்தில் உறுத்தாமல் ம்ருது வாயிருத்தலும் பிறவும் ஆம். ப்ரஸாதமாவது தெளிவு. அது ச்லோகத்திற்கு எளிதில் பொருள் புரிந்து கொள்ளும்படி அமைந் திருத்தலும், முத்துக்கு அழுக்கின்மையும் ஆம். அவை யிரண்டும் பதவிதாக்ரதிதமாயிருக்கும். ச்லோகம் வியா கரண சாஸ்த்ரமறிந்தவனால் தொகுக்கப்பட்டிருக்கும். பதம் வ்யாகரண சாஸ்த்ரம். இனி முத்து மாலை – கோக்குமிடமறிந்தவனாலே கோக்கப்பட்டதாய் இருக்கும்.

அதாவது முத்துக்களில் சில பெரிதாயும் சில சிறிதாயும் சில நடுத்தரமாயும் இருக்கும். மாலையிலும் முதல் முடிவு நடு முதலிய சில இடங்கள் இருக்குமல்லவா? அதில் எத்தகைய முத்தை எந்த இடத்தில் வைத்துக் கோத்தால் மாலை சோபையைப் பெறுமோ அந்த இட மறிந்தவனாலே கோக்கப்பட்டதாயிருக்கு மென்றபடி. பதம் – கோக்குமிடம். ஸூக்தி : நல்வார்த்தைகள் அமைந்த ச்லோகம். ஹாரலதா – முத்துமாலை. ஹாரம் – முத்து. முத்து மாலை மெல்லியதாக லதை (=கொடி) போன்றிருத்தளால் ஹாரலதா எனப்பட்டது. இங்கு நாயக சப்தம் பாட்டுடைத் தலைவனையும், ஹாரத்தில் மத்ய மணியையும் குறிக்கும். சிறந்த பாட்டுடைத்தலைவனாகிய நரசிங்கப் பெருமாளாலே இவ்வம்ருதபலாவளி என்னும் ஸ்தோத்ரம் சோபிக்கிறது. உயர்ந்த – நடுவில் பதித்த மணியினால் முத்துமாலை சோபிக்கிறது.

२७)सरससुमनोऽभिरामा साधु च संस्कारसम्भृतोल्लासा ।
समुपैति सूक्तिलतिका सङ्गादमृतफल! तव हि साफल्यम् ॥

(27) ஸரஸஸுமநோபிராமா ஸாது ச ஸம்ஸ்கார ஸம்ப்ருதோல்லாஸா ।
ஸமுபைதி ஸூக்திலதிகா ஸங்காதம்ருதபல! தவ ஹி ஸாபல்யம்॥

அம்ருதபல – அம்ருதம்போல் இனிக்கும், – அழியாத பழமாகிய அக்காரக்கனிப் பெருமானே! தவ ஸங்காத் – உன்னுடைய ஸம்பந்தத்தாலே, ஸூக்திலதிகா – அடியேனுடைய (1) ஸூக்தியாகிற (2) கொடியானது, ஸாது – நன்றாக, ஸம்ஸ்கார ஸம்ப்ருத உல்லாஸா = (1) அடிக்கடி கவித்வம் செய்வதால்

உண்டான பழக்கத்தாலே நிறைந்த ப்ரகாசத்தை யுடையதாகவும் (2)நீர்விடுதல் எருஇடுதல் முதலிய சீர்படுத்துதலாலே நிறைந்த விளக்கத்தையுடையதாகவும், ஸரஸஸுமந:அபிராமா ச = (1) ரஸிகர்களான வித்வான் களுக்கு இன்ப மூட்டுவதாகவும் (2) தேனோடு கூடிய புஷ்பங்களாலே பார்ப்பவர்க்கு இன்ப மூட்டுவதாகவும் இருந்து, ஸாபல்யம் – (1) மோக்ஷமாகிய பலத்தோடு – புருஷார்த்தத்தோடு கூடியிருத்தலையும், (2) இனி மையான பழத்தோடு கூடியிருத்தலையும், ஸமுபை பதி ஹி – அடைகின்ற தல்லவா?

இதுதன்னில் தம்முடைய ஸ்ரீஸூக்தியை ஒரு கொடியாக உருவகப்படுத்துகிறார். ஸ்ரீஸூக்தியானது கவித்வம் செய்து பழகிய ஒருகவியால் செய்யப் பட்டதாகில் மிகவும் விளக்கம் பெற்று ரஸிகர்களான வித்வான்களுக்கு உகப்பையூட்டி, இறுதியில் எம் பெருமானுடைய ஸம்பந்தத்தாலே, கவித்வம் செய்த வனுக்கும், அதைப்படிப்பவர்க்கும் மோக்ஷமாகிய பலத்தைப் பெறுவிக்கும். கொடியானது நீர் விட்டு எருவிட்டுத் திருத்தம் செய்யப்பட்டால் தேன் நிறைந்த மலர்களோடு கூடியிருந்து கடைசியில் நல்ல பழங் களையும் நமக்குத் தருமென்றபடி. இங்கும் (1) என்று குறிப்பிட்டவற்றை ஸ்ரீஸூக்திக்கும் (2) என்று குறிப் பிட்டவற்றைக் கொடிக்கும் பொருத்திக்கொள்க. இதிலும் சிலேடையுள்ளமை காண்க.

२८)सत्पक्षपातसुभगं सन्मानससरसिकाम्बुजासवन्तम् ।
भुवनाश्रयं विशुद्धं बुध्ये घटिकावनौकसं हंसम् ॥

(28) ஸத்பக்ஷபாதஸுபகம் ஸந்மாநஸஸரஸிகாம்புஜாஸக்தம் ।
புவநாச்ரயம் விசுத்தம் புத்யே கடிகாவநௌகஸம் ஹம்ஸம் ॥

ஸத்பக்ஷபாத ஸுபகம் — (1) நல்லோர்களிடம் பக்ஷபாதம் — ஒரு தலையில் பற்று உள்ளமையினால் மனத்தைக் கவருமவனும், (2) அழகிய சிறகடித்தலாலே மனத்தைக்கவருமதும், ஸந்மாநஸ ஸரஸிகா அம்புஜ ஆஸக்தம் — (1) நல்லமனமுடையவர்களென்னும் தடாகத்தில் உள்ள ஹ்ருதயகமலத்தில் மிக்க பற்றுடையவனும் (2) நல்ல மானஸஸரஸ்ஸில் முளைத்த தாமரை மலர்களிடம் மிக்க பற்றுடையதும், புவந ஆச்ரயம் — (1) பூமியை ஆதாரமாக உடையவனும், (2)நீரை ஆதாரமாக வுடையதும், விசுத்தம் — (1) மிகவும் பரிசுத்தனானவனும், (2) மிகவும் வெண்மை நிறமுடையதுமான, கடிகாவந ஓகஸம் — (1) கடிகை மலைக்காட்டை இருப்பிடமாகவுடையவனுமான எம்பெருமானை, ஹம்ஸம் — (2) ஹம்ஸமாக, புத்யே — கருதுகிறேன்.

இதில் கடிகைமலைநாயகனை ஹம்ஸமாக உருவகிக்கிறார். விசேஷணங்களை முன்புபோல் எம்பெரு மானுக்கும் ஹம்ஸத்துக்கும் பொருந்தும்படி அந்வயித்துக் கொள்க. இது தன்னிலும் சிலேடை காணத்தக்கது. புவனம் — பூமி, ஜலம்.

२९) सुमनोरसकृतसङ्गं स्वरणविशेषेण तोषितानङ्गम् ।
कमलालयान्तरङ्गं कलये घटिकाद्रिकल्पतरुभृङ्गम् ॥

(29)ஸுமநோரஸ க்ருதஸங்கம் ஸ்வரணவிசேஷேண தோஷிதாநங்கம் ।
கமலாலயாந்தரங்கம் கலயே கடிகாத்ரி கல்பதருப்ருங்கம் ॥

ஸுமநஸ் ரஸ க்ருதஸங்கம் — (1) ஞானிகளுடைய பக்தியாகிற ரஸத்தில் பற்றுவைத்தவனும், (2) புஷ்பத்தின் ரஸமான தேனில் பற்றுவைத் துள்ளதும்,

ஸ்வரண விசேஷேண— (1) தனது பேச்சாகிய ஒலி யினாலே (2) தனது ரீங்காரமாகிய ஒலியினாலே, தோஷித அநங்கம் - (1) மகிழ்விக்கப் பட்ட — ப்ரா க்ருதசரீரமற்ற முக்தர்களையுடையவனும், (2) மகிழ் விக்கப்பட்ட மந்மதனையுடையதும், கமலாலயா அந்த ரங்கம் — தாமரையை இருப்பிடமாகவுடைய பிராட்டி யிடம் மனத்தைச் செலுத்து மவனுமான. கமல ஆலய அந்த: அங்கம் — தாமரை மலராகிய வீட்டினுள்ளே தனது உடலை வைத் துள்ளதுமான, கடிகாத்ரி கல்ப தருப்ருங்கம் — கடிகை மலையில் முளைத்த கற்பகத்தரு போன்று அனைத்தையும் அனைவர்க்கும் வழங்கும் (1) பெருமானாகிய (2) வண்டை, கலயே— த்யானம் செய்கிறேன்.

இதில் கடிகைக்கற்பகமரமாக எம்பெரு மானைக் குறிப்பிட்டு அப்பெருமானையே வண்டாக உருவகித்துள்ளார். அல்லது கடிகைமலையையே கற்பகமரமாகவும் எம்பெருமானை அதில் படிந்த வண்டாகவும் உருவகிக்கிறாரென்றலும் பொருந்தும்.

ஸௌமநஸ: (1) புஷ்பங்கள் (2) ஞாநிகள். உலகிலுள்ள மக்களுக்குக் காமத்தையுண்டுபண்ணும் மந்மதனுக்கு வண்டுகளின் ரீங்காரவொலி உதவுகின்ற மையால், வண்டுகள் மன்மதனுக்கு மகிழ்ச்சியூட்டு வனவாம். பரமபதத்தில் எம்பெருமானுடைய பேச்சுக் கள் முக்தி பெற்றவர்களுக்கு ஸந்தோஷத்தை விளை க்கும். கதா மாம் பகவாந் ஸ்வகீயயா ஸ்நிக்த கம்பீர மதுரயா கிரா பரிசர்யாயாம் ஆஜ்ஞாபயிஷ்யதி (= எப்போது அடியேனை, பகவான் தன்னுடையதான — அன்புததும்பி, கம்பீரமாய் இனிமையான பேச் சாலே கைங்கர்யங்களில் ஆணையிடப்போகிறார்)

என்கிற ஸ்ரீ வைகுண்டகத்யம் (சூர்4) காணத்தக்கது. அநங்க: — (1) சிவனால் உடலழியப் பெற்ற மந்மதன் (2) இந்த ஊனவுடல் கழியப் பெற்ற முக்தன். கமலாலயா — அந்தரங்கம் என்று எம்பெருமான் விஷயத்தில் பிரிக்க. வண்டு விஷயத்தில் கமலாலய — அந்த: அங்கம் என்று பிரிக்க.

३०)दुर्गतिदु:खितचित्ताः दुष्करयोगान् विमुच्य सुखसेव्याम् ।
प्राज्ञाः प्रयान्ति नित्यां भूतिं घटिकाद्रिभूपमालम्ब्य ॥

(30)துர்கதிதுஃகித சித்தா: துஷ்கரயோகாந் விமுச்ய ஸுகஸேவ்யாம்।
ப்ராஜ்ஞா: ப்ரயாந்தி நித்யாம் பூதிம் கடிகாத்ரிபூபமாலம்ப்ய ॥

துர்கதி துஃகித சித்தா: — (1) ஸம்ஸாரமென்னும் நரகத்தில் வசிப்பதனால் துன்புற்ற மனத்தையுடைய (2) வறுமையினால் துன்புற்ற மனத்தையுடைய, ப்ராஜ்ஞா: —(1) ஞானிகள் (2) புத்திசாலிகள், துஷ்கர யோகாந் — வருந்திச் செய்யவேண்டிய (1) கரும யோகம் ஞானயோகம் பக்தியோகம் முதலிய மோக்ஷோ பாயங் களை, (2) உடலுழைப்பு வாணிபம் முதலான பணம் சம்பாதிக்கும் உபாயங்களை, விமுச்ய — அறவே விட்டுவிட்டு, கடிகாத்ரிபூபம் — கடிகை மலையரசனை, ஆலம்ப்ய = தஞ்சமாகப்பற்றி, ஸுகஸேவ்யாம் — வருத்தமின்றி அனுபவித்தற்கு உரிய, நித்யாம் பூதிம் — (1) நித்யவிபூதி யென்னும் பரமபதத்தை (2) அழியாத செல்வத்தை, ப்ரயாந்தி — அடைகின்றனர்.

வறுமையினால் வாடியவர்கள் பணமீட்டும் — வாணிபம் முதலிய வருத்தந்தரும் வழிகளை விட்டு கடிகைமலையரசனைத் தஞ்சமாகப்பற்றி நீண்டநாள் நீடித்திருக்கக்கூடிய செல்வத்தைப் பெறுகிறார்கள்.

பிறப்பிறப்புத்தொடர்ச்சியென்னும் இவ்வுலக வாழ்க்கை யினால் வருந்தியவர்கள் மோக்ஷத்திற்கு உரிய — வருத்தம் தருகின்ற கருமயோகாதிகளான உபாயங் களைவிட்டு ஸித்தோபாயமான கடிகை மலையர சனைச் சரணமாகப்பற்றி, வருத்தமேயில்லாத ஸுகமே வடிவமான பரமபதத்தை அடைகிறார்கள். இதனால் கடிகையெம்பெருமான் ஐச்வர்யார்த்திகளாலும், மோக்ஷார்த்திகளாலும் சேவிக்கப்படுகிறான் என்று, இரண்டு வகைப்பட்ட கருத்துக்களும் ஒரேவகைச் சொற்களால் சிலேடைவகையில் காட்டப்பட்டுள்ளமை காணத்தக்கது.

இங்கு ஸுகஸேவ்யம் என்று பாடமிருந்தால் அது கடிகாத்ரிபூபம் என்பதற்கு விசேஷணமாய், கஷ்டமான உபாயங்களை விட்டு ஸுகஸேவ்யனான எம்பெருமானைப் பற்றி என்று பொருள்தந்து சிறப்பைப் பெறும். மற்றை உபாயம் கஷ்டஸாத்யம். எம்பெருமானாகிய உபாயம் ஸுகஸாத்யம் என்பதன்றோ ஆசிரியருக்குக் கருத்தாக இருக்க அடுப்பது. ப்ராஜ்ஞா: — (1) ஸுலபமான உபாய த்தையறிந்த புத்திசாலிகள் (2) ஞானிகள்.

३१)कलयन्ति नैव सन्तः कापुरुषद्वारि कारणात् कथनम् ।
घटिकाशिखरिमुकुन्दं कमपि निधिं सुलभमनवधिं लब्ध्वा॥

(31)கலயந்தி நைவ ஸந்த: காபுருஷத்வாரி காரணாத் கதனம் ।
கடிகாசிகரிமுகுந்தம் கமபி நிதிம் ஸுலபமநவதிம் லப்த்வா ॥

ஸந்த: — எம்பெருமானுடைய பெருவள்ளல் தன் மையை அறிந்த புத்திசாலிகள். கடிகாசிகரிமுகுந்தம் — கடிகைமலையில் எழுந்தருளியுள்ள முகுந்தனென்கிற,

ஸுலபம் — எளிதில் கிடைக்கத்தக்க, அநுவதிம் — எடுக்க எடுக்கக்குறையாத, கமபி — ஒப்பற்ற, நிதிம் — நிதியை — புதையலை, லப்த்வா — அடைந்து, (அதன்பிறகு) காபுருஷ த்வாரி — இழிந்தவனுடைய வீட்டுவாசலில், காரணாத் — செல்வம் காரணமாக, கதனம் — (அவனைப் பற்றிக்)கவி சொல்லுவதை, நைவ கலயந்தி — எண்ணவே மாட்டார்கள்.

முன்ச்லோகத்தில் — துஷ்கர யோகமென்னும் — வருந்திச் செய்யும் உபாயத்தைக் கூறியபடியால் அதில் சேர்ந்த உபாயமான — நீசர்தம்வாசல் பற்றித் துதி சொல்லுதலையும் புத்திமான்கள் விட்டு விட்டார் கள்—எம்பெருமானைப் பற்றிய பிறகு, என்று இது தன்னில் கூறியருளினார். முகுந்த:— (முஞ்ச, குஞ்ச, ததாதி) மோக்ஷத்தையும் இவ்வுலக வாழ்வையும் கொடுப்பவன் என்று பொருள்படும்.

३२)मकरमथ कूर्मरूपं वरशङ्खं पद्ममपि महापद्मम् ।
कुन्दमसितं मुकुन्दं को वा घटिकाद्रिनवनिधिं न भजेत्॥

(32)மகரமத கூர்மரூபம் வரசங்கம் பத்மமபி மஹாபத்மம் ।
குந்தமஸிதம் முகுந்தம் கோவா கடிகாத்ரிநவநிதிம் ந பஜேத் ॥

மகரம் — மீனாக அவதரித்தவனும், அத — மேலும், கூர்ம ரூபம் — ஆமையுருவம் கொண்டவனும், வரசங்கம் — உயர்ந்த சங்கையுடையவனும், பத்மம் — தாமரைமலரைக் கையிலேந்தியவனும், மஹாபத்மம் — பூஜிக்கத்தக்க ஸ்ரீமஹாலக்ஷ்மியை (மனைவியாக) உடையவனும், குந்தம் — பாபத்தைப் போக்குமவனும், அஸிதம் — நீலவர்ணமுடையவனும், முகுந்தம் — மோக்ஷபூமியைத்தருமவனும் ஆகிய, கடிகாத்ரி நவநிதிம்

— கடிகாத்ரி எம்பெருமானென்னும் — (மகரமும் கூர்மமும் உயர்ந்த சங்கமும் பத்மமும் மஹாபத்மமும் குந்தமும் அஸிதமும் (= நீலமும்) முகுந்தமும் கர்வமுமாகிய) புதிய — அபூர்வமான நிதியை, கோவா — எவன்தான், ந பஜேத் — அடையமாட்டான்.

இந்த ச்லோகத்தில் எம்பெருமானை ஒன்பது வகையான நிதியாக அருளிச்செய்கிறார். மஹா பத்மம், பத்மம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், கர்வம்—என்று நிதிகள் ஒன்பது. இவற்றில் ஒன்று மற்றொன்றாக இராது. இவை யெல்லா மாகவும் எம்பெருமானிருக்கிறானென்று அவனை நவநிதி (— புதிய — எங்கும் காணாத நிதி) என்கிறார். ஒன்பது வகைப்பட்ட நிதியால் கிடைக்கும் பயனெல்லாம் எம்பெருமானொருவனால் கிடைக்குமென்றபடி. இந்த இரண்டு ச்லோகங்களிலும் கடிகைமலையரசனை நிதியாகக் குறிப்பிடுகின்றமை காணத்தக்கது. இந்த ச்லோகத்தில் எட்டு வகை நிதிகளையே குறித்து ள்ளார். அபி என்றதனால், கர்வம் என்ற நிதியையும் சேர்த்துக்கொள்க. எம்பெருமான் பக்ஷத்தில் கர்வ மென்பது வாமனனுக்கு வாசகமாகும்.

३३)काञ्चनमये स्फुरन्तं कञ्चन घटिकामहीभृतः शिखरे ।
कृष्णमणिमर्घरहितं के वा न विदन्ति कृत्स्नतः श्लाघ्यम् ॥

(33)காஞ்சநமயே ஸ்புரந்தம் கஞ்சந கடிகாமஹீப்ருத: சிகரே ।
க்ருஷ்ணமணிமர்க்கரஹிதம் கேவா ந விதந்தி க்ருத்ஸ்நத: ச்லாக்யம் ॥

கடிகா மஹீப்ருத: — கடிகையென்னும் மலையி னுடைய, காஞ்சநமயே — பொன்மயமான, சிகரே — கொடுமுடியில், ஸ்புரந்தம் — விளங்குகின்றதும், அர்க்க ரஹிதம் — விலைமதிப்பற்றதுமான, கஞ்சந — ஒரு,

க்ருஷ்ணமணிம் — கருமணியை, க்ருத்ஸ்நத: — எல்லா மணிகளைக் காட்டிலும், ச்லாக்யம் — உயர்ந்ததாக, கே வா — அறிவுபடைத்தயார்தான், ந விதுந்தி — அறிய மாட்டார்கள்.

இதில் எம்பெருமானை நீலமணியாக வருணிக் கிறார். தங்கத்தில் அழுத்திய நீலமணி மிகவும் சோபிக்கும். அது போல தங்கமயமான கடிகைக்கொடு முடியில் எழுந்தருளியுள்ள நீல மணிவண்ணனான எம்பெரு மானும் சோபிக்கிறான். க்ருத்ஸ்நத: என்பதற்கு — ஜாதியாலும் ப்ரகாசத்தாலும் பொன்னோடு சேர்ந் திருப்பதனாலும் — என்றும் பொருள் கொள்ளல் தகும்.

३४)संसरणसरणिपान्थाः तापत्रयतरणिकिरणसन्तप्ताः ।
आश्वसिताः घटिकाद्रौ हरिचन्दनमेत्य शीतलच्छायम् ॥

(34) ஸம்ஸரணஸரணிபாந்தா: தாபத்ரயதரணிகிரணஸந்தப்தா: ।
ஆச்வஸிதா: கடிகாத்ரௌ ஹரிசந்தநமேத்ய சீதளச்சாயம் ॥

ஸம்ஸரணஸரணிபாந்தா: — ஸம்ஸாரமாகிய வழியில் எப்போதும் திரியும் வழிப்போக்கர்களாய், தாபத்ரய தரணிகிரண ஸந்தப்தா:— தாபத்ரயமென்கிற ஸூர்ய கிரணங் களினால் மிகவும் தபிக்கப்பெற்ற மனிதர்கள், கடிகாத்ரௌ — கடிகைமலையில் (உள்ள), சீதளச்சாயம் — குளிர்ந்த நிழலையுடைய, ஹரிசந்தனம் — ஹரி சந்தன மென்கிற தேவலோக வ்ருக்ஷத்தை (எம்பெருமானை) ஏத்ய — அடைந்து, ஆச்வஸிதா:பவந்தி — இளைப்பாறுகின்றனர்.

தாபத்ரயம் — ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதி தைவிகம் என்ற மூன்று தாபங்கள். மன வருத்தமும் உடல் நோயும் ஆத்யாத்மிகம். தேள் பாம்பு புலி சிங்கம் மனிதன் ஆகியவற்றால் உண்டாகும் கஷ்டம் ஆதிபௌதிகம். மழை வெயில் காற்று முதலிய

வற்றால் பிறக்கும் வருத்தம் ஆதிதைவிகம். இவற்றை ஸம்ஸாரமாகிற வழியில் செல்லும் வழிப்போக்கர் களுக்குத் தாபமாகச் சொன்னார். ஸூரிய வெப்பத் தினால் துக்கமடைந்தவன் நிழல் செய்யும் மரத்தை அணுகித் தாபந்தீரப் பெறுவதுபோல், இம் மூவகைத் தாபங்களினால் வருந்துமவன் வாஸுதேவ தரு என்று ப்ரஸித்தமான எம்பெருமானையடைந்து தாபந்தீரப்பெற்று மகிழ்கிறான் என்கிறார்.

३५)मुक्तम् निजजनबद्धं मूलं जगतां फलं च घटिकाद्रौ ।
आकलयताद्भुतं महदाकण्ठं मनुजमानने सिंहम् ॥

(35) முக்தம் நிஜஜந பத்தம் மூலம் ஜகதாம் பலஞ்சகடிகாத்ரௌ ।
ஆகலயதாத்புதம் மஹதாகண்டம் மநுஜமாநநே ஸிம்ஹம் ॥

முக்தம் — இயற்கையாகவே ஸம்ஸாரத்திலிருந்து விடுபட்டதும், நிஜஜந பத்தம் — தன்னுடைய பக்த ஜனங் களுக்குக் கட்டுப்பட்டதும், ஜகதாம் — உலகங்களுக்கு, மூலம் — வேரானதும் (—காரணமானதும்), பலம்ச — பழமானதும் — பயனான புருஷார்த்தமானதும், ஆக ண்டம் மநுஜம் — காலிலிருந்து கழுத்து வரையிலும் மனிதவுருப் பெற்றதும், ஆநநே ஸிம்ஹம் — முகத்தில் சிங்கமுமாகிய, மஹத் அத்புதம் — பெரிய ஆச்சரியமானதொரு பொருளை. கடிகாத்ரௌ — கடிகைமலையில், ஆகலயத — (சென்று) கைப்பற்றுங்கள். அல்லது தியானியுங்கள்.

உலகில் ஒரே சமயத்தில் ஒரே வஸ்து, விடு பட்டதும் கட்டுப்பட்டதுமாக இராது. ஒன்றே வேராகவும் பழமாகவும் இராது. ஒரே பொருள் மனிதனாகவும் சிங்கமாகவும் இராது. அப்படி இங்கு அமைந்துள்ள தனால் எம்பெருமானை **மஹத் அத்புதம்** என்றார்.

३६)पश्यन्ति नयनहरिणाः स्पष्टं घटिकाद्रिलुब्धकं यावत् ।
परिसरचरैस्तु तावत् पातकपतगैः पलायितं क्वापि ॥

*(36)* பச்யந்தி நயநஹரிணா: ஸ்பஷ்டம் கடிகாத்ரிலுப்தகம்யாவத்।
பரிஸரசரைஸ்து தாவத் பாதகபதகை: பலாயிதம் க்வாபி ॥

நயனஹரிணா: — (அடியேனுடைய) கண்களென்னும் மான்கள், கடிகாத்ரி லுப்தகம் — கடிகை மலையிலுள்ள எம்பெருமானாகிய வேடனை, யாவத் — எது வரையிலும், ஸ்பஷ்டம் — தெளிவாக, பச்யந்தி — பார்க்கின்றனவோ, தாவத் — அதுவரையிலும், பரிஸர சரை:— (அடியேனுடைய) பக்கத்தில் திரிந்து கொண்டிருந்த, பாதகபதகைஸ்து — பாவங்களாகிய பறவைகளாலோ எனின், க்வாபி — எங்கேயோ, பலாயிதம் —ஓடிப் போதல் ஆயிற்று. மஹாத்அத்புதம் — (இது) பெரிய ஆச்சரியம்.

முன் ச்லோகத்திலிருந்து மஹாத் அத்புதம் என்ற சொற்களை வருவித்துக் கொள்க. எம்பெருமானை ஸேவித்தேன், பாவங்கள் பறந்தோடின — என்பதனை ஒரு சமத்காரமாகக் கூறுகிறார். வேடனை மான்கள் பார்த்துக் கொண்டிருந்தனவாம். பறவைகள் ஓடினவாம். பார்த்தமான்கள் ஓடவில்லை, பாராதபறவைகள் ஓடின — என்பது பெரிய ஆச்சரியமன்றோ.

३७)विमलमणिहेमकटकं विलसितवनमालयोल्लसन्मौलिम् ।
घटिकाद्रिसुहृदमीडे काञ्चनपीतांशुकावृतं प्रांशुम् ॥

*(37)* விமலமணிஹேமகடகம் விலஸிதவநமாலயோல்லஸந்மௌளிம் ।
கடிகாத்ரிஸுஹ்ருதமீடே காஞ்சநபீதாம்சுகாவ்ருதம் ப்ராம்சும் ॥

விமலமணி ஹேமகடகம் — குற்றமற்ற ரத்தினங்கள் அழுத்தப்பெற்ற பொன்வளையல்களை அணிந்தவனும்,

விலஸித வநமாலயா — விளங்குகின்ற வனமாலையினால், உல்லஸத் மௌளிம் — ப்ரகாசிக்கின்ற திருமுடியையுடையவனும், காஞ்சநபீதாம்சுகஆவ்ருதம் — பொன்மயமான பீதாம்பரமணிந்தவனும், ப்ராம்சும் — உயரமானவனுமாகிய, கடிகாத்ரி ஸுஹ்ருதம் — கடிகை மலையிலுள்ள நன்மனம் படைத்த தோழனை, ஈடே — ஸ்தோத்ரம் செய்கிறேன்.

முன்ச்லோகத்தில் எம்பெருமானை வேடனென்றார். வேடனாகில் கொடியவனாக இருப்பானோ என்று ஐய மெழ, கொடியவனல்லன், நன்மனம் படைத்த தோழனாகி யிருப்பவனென்று இதனால் ஐயத்தைப் போக்கினா ராயிற்று. ஸுஹ்ருத் – சோபநா சம்ஸிஹ்ருதயவாந் — நன்மையை வேண்டும் மனம் படைத்தவன். எம் பெருமானுடைய அகத்தின் அழகை ஸுஹ்ருதம் என்பதனாலும், திருமேனியழகை மற்றுள்ள எல்லாப் பதங்களாலும் குறிப்பிட்டருளினர். **ஆபாதபத்மம் யா மாலா வனமாலேதி ஸா மதா** (தோளிலிருந்து பாதகமலம் வரை தொங்குகின்ற மாலை வனமாலையென்று கருதப் பட்டது) என்ற களிங்கரின் வாக்கின்படி வனமாலை யாவது திருமேனியில் சாத்தும் மாலையாக இருக்க, இவர் சிரஸ்ஸில் சாத்தும் மாலையாகக் கூறியதற்குக் காரணம் அறிய முடியவில்லை. கண்டு கொள்வது. இவரிப்படி அருளுகின்றமையால் இங்ஙனமும் இருக்கத்தகும்.

३८)सद्भिः परिगतममलैः संश्रितसर्वंसहं हिरण्यकृतम् ।
घटिकाद्र्युपरि सुमेरुं कलये सत्वोत्तरं सुरैस्सेव्यम् ॥

**(38) ஸத்பி: பரிகதமமலை: ஸம்ச்ரிதஸர்வம்ஸஹம் ஹிரண்யக்ருதம் ।
கடிகாத்ர்யுபரி ஸுமேரும் கலயே ஸத்த்வோத்தரம் ஸுரைஸ்ஸேவ்யம் ॥**

அமலை: — குற்றமற்ற, ஸத்பி: — முனிவர்கள் முதலிய நல்லோர்களாலே, பரிகதம் — சூழப்பெற்றதும், ஸம்ச்ரித ஸர்வம்ஸஹம் — (1)அடையப்பட்ட பூமியை உடையதும்(=பூமியில் இருப்பதும்) (2)தன்னையடைந்தவரின் குற்றமெல்லாவற்றையும் பொறுக்கவல்லதும், ஹிரண்யக்ருதம் — (1)பொன்னால் செய்யப்பட்டதும்,(2) ஹிரண்யனைக் கிழித்ததும், ஸத்த்வ உத்தரம் — அதிகமான ஸத்துவகுணம் படைத்ததும், ஸுரை: ஸேவ்யம் — (1) தேவதைகளால் ஸேவிக்கப்பட்டதும், (2)தேவதைகளால் வசிக்கப்பெற்றதுமான, ஸுமேரும்—மேருமலையை, கடிகாத்ரிஉபரி—கடிகைமலையின் மேலே, கலயே—காண்கிறேன்.

இதில் கடிகையெம்பெருமானை மேருமலையாக ரூபணம் செய்கிறார். மேருமலைக்கு இடப்பட்ட ஐந்து விசேஷணங்களில் மூன்று சிலேடையினால் இரண்டு பொருள்களைத்தருவன. மற்ற இரண்டும் ஒரே பொருள் தந்து பிரசித்தமான மேருவுக்கும் எம்பெருமானாகிய மேருவுக்கும் பொதுவாய் நிற்பன. ஸம் ச்ரிதா —ஸர்வம் ஸஹா யேநஸ: — என்கிற வ்யுத்பத்தியால் பூமியில் இருக்கும் மேருமலையைக் குறிப்பிடுகிறது — ஸம்ச்ரிதஸர்வம் ஸஹ: என்பது. அதுவே—ஸம் ச்ரிதாநாம் ஸர்வம் (தோஷம்)ஸஹதே என்னும் வ்யுத்பத்தியாலே ஆச்ரிதர்களுடைய குற்றங்கள் அனைத்தையும் பொறுத்துக் கொள்ளுகிற எம்பெருமானாகிய மேரு மலையைக் குறிக்கிறது. ஹிரண்ய க்ருதம் என்பது ஹிரண்யேந க்ருத: என்ற வ்யுத் பத்தியாலே பொன் னாலான மேருவைக் குறிக்கிறது. ஹிரண்யம் க்ருந்ததி இதி— ஹிரண்யக்ருத்—தம், ஹிரண்ய க்ருதம் என்ற வ்யுத்பத்தியால் ஹிரணியனைக் கிழித்த எம்பெருமானாகிய மேருவைக் குறிக்கிறது; க்ருதீ— ச்சேதநே என்பது தாது.

ஸுரைஸ்ஸேவ்யம் என்பதில் ஸேவ்யம் என்பது வசிக்கத்தக்கது என்ற பொருளைத்தந்து மேருவைக் காட்டுகிறது. தேவர்கள் மேருமலையில் வசிப்பதனால். அதுவே ஸேவிக்கத் தக்கது என்னும் பொருளைக் காட்டி தேவர்களால் ஸேவிக்க (வணங்க)த்தக்க எம்பெருமானைக் காட்டுகிறது. பிரசித்தமான மேரு பூமியில் இருக்கிறது. எம்பெருமானாகிய மேரு கடிகைமலையில் விளங்குகின்றது என்பது இரண்டு மேருக்களுக்கும் வாசி.

३९)सरसं सम्प्लुतवेलं सन्धृतमणिराजसरसिजाशङ्खम् ।
गम्भीरममितममलं गाहे घटिकाचलेश कलशाब्धिम् ॥

**(39) ஸரஸம் ஸம்ப்லுத வேலம் ஸந்த்ருத மணிராஜ ஸரஸிஜாசங்கம்।**
**கம்பீரமமிதமமலம் காஹே கடிகாசலேச கலசாப்திம் ॥**

ஸரஸம் — (1)ஆனந்தத்தோடுகூடியவனும் (2)சுவையோடு கூடியதும், ஸம்ப்லுத வேலம் —(1) கரை போல் மேட்டு மடையான நீசர்களிடமும் (அருள் செய்வதற்காகச்) செல்லு மவனும் (2) கரையையும் மூழ்கடிப்பதும், ஸந்த்ருத மணிராஜ ஸரஸிஜா சங்கம் — (1) நன்றாக தரிக்கப்பட்ட கௌஸ்துபமணி ஸ்ரீமஹாலக்ஷ்மி சங்கு இவற்றை உடையவனும் (2)இவற்றையுடையதும், கம்பீரம் — (1)ஆழமான திருவுள்ளமுடையவனும், (2)ஆழமுடையதும், அமிதம்—தேச கால வஸ்துக்களால் அளவு படாதவனும் (= எல்லா தேசத்திலும் எல்லாக் காலத்திலும் எல்லாப் பொருளாகவும் இருப்பவனும்) (2) பரந்ததும்(—விசாலமானதும்)அமலம் — (1) குற்றமற்றவனும், (2)அழுக்கற்றதும் ஆகிய, கடிகாசலேச கல சாப்திம் —(1)கடிகைமலைத்தலைவனாகிய (2)திருப்பாற் கடலை, காஹே — (1)அனுபவிக்கிறேன் (2) குடைந்தாடுகிறேன்.

ஷிதில் எம்பெருமானைத் திருப்பாற்கடலாக அருளிச் செய்கிறார். ஸந்த்ருதமணிராஜஸரஸிஜா சங்கம் என்பது, பாற்கடலைக் கடைந்து கௌஸ்து பத்தையும் ஸ்ரீமஹாலக்ஷ்மியையும் எம்பெருமான் கைப்பற்றியதனால் கடைவதற்கு முன்பு பாற்கடலிலும், கடைந்த பின்பு எம்பெருமானிடமும் அவையிரண்டு முள்ளமையும், எம்பெருமானிடம் பாஞ்ச ஜந்யமாகிய சங்கு உள்ளமையினாலும், பாற் கடலில் சங்குகள் இருப்பதனாலும், சங்குள்ளமையும் எம்பெருமானிடமும் பாற்கடலிலும் பொருந்தும். மற்றவை ஸ்பஷ்டம்.

४०)विगततमोग्रहमचलं वृद्धिक्षयरहितमनुदयास्तमयम् ।
विलसितमानसकमलं वीक्षे घटिकाद्रिविधुमहो विमलम् ॥

*(40)* விகததமோக்ரஹமசலம் வ்ருத்திக்ஷயரஹித மநுதயாஸ்தமயம் ।
விலஸித மாநஸகமலம் வீக்ஷே கடிகாத்ரிவிதுமஹோ விமலம் ॥

விகத தமோ க்ரஹம் – *(1)* தமோ குணத்தினால் பிடிக்கப்படாதவனும் *(2)* ராகுவினால் உண்டாகும் க்ரஹணமில்லாதவனும், அசலம் *(1)* அழிவற்றவனும் *(2)* அசைவில்லாதவனும், வ்ருத்திக்ஷய ரஹிதம் – *(1,2)* வளர்வும் தேய்வும் இல்லாதவனும், அநுதயாஸ்தமயம் – *(1,2)* பிறப்பும் இறப்பு மற்றவனும், விலஸித மாநஸ கமலம் – *(1)* (யோகிகளின்) ஹ்ருதயகமலத்தை மலரச் செய்பவனும் *(2)* மாநஸஸரஸ்ஸிலுள்ள தாமரை மலரை மலரச்செய்பவனும், விமலம் –*(1)* குற்றமற்ற வனும் *(2)* களங்கமற்றவனுமாகிய, கடிகாத்ரி விதும் – கடிகை மலையிலுள்ள *(1)* (எம்பெருமானாகிய) *(2)* சந்திரனை, வீக்ஷே – ஸேவிக்கிறேன். அஹோ – ஆச்சரியம்.

எம்பெருமானாகிய சந்திரன் உலகிலுள்ள சந்திர னுக்கு முரண்பட்டவனாக இருப்பதனால், இப்படிப் பட்ட சந்திரனைக் காண்பதில் ஆச்சரியமடைகிறார்.

சந்திரனுக்கு — ராஹுக்ரஹணமும் அசைதலும், வளர்வும், தேய்வும், பிறப்பும், இறப்பும், களங்கமும், தாமரை மலரைக் கூம்பச் செய்தலும் உண்டு. இவை யில்லாத சந்திரன் கடிகைமலையெம்பெருமான். எம்பெருமான் பக்ஷத்தில் விசேஷணங்களுக்கு வேறு பொருளும் காட்டப்பட்டமை காணத்தக்கது.

४१ )निरवधिकनित्यमहसा निर्मलमुक्तानुबन्धसुभगेन ।
घटिकाद्रिमकुटभाजा मणिना मम मनसिवारितं तिमिरम् ॥

(41)நிரவதிக நித்யமஹஸா நிர்மல முக்தாநுபந்த ஸுபகேந ।
கடிகாத்ரிமகுடபாஜா மணிநா மம மநஸி வாரிதம் திமிரம்॥

நிரவதிக நித்ய மஹஸா — எல்லையற்ற அழியாத ஒளியை உடையதும், நிர்மலமுக்தா அநுபந்த ஸுபகேந — சுத்தமான முத்துக்களோடு சேர்ந்ததனால் அழகுடை யதும், கடிகாத்ரிமகுடபாஜா — கடிகைமலையின் சிகரத்தை அடைந்ததுமான, மணிநா — எம்பெருமானாகிய ரத்தி னத்தி(னொளியி)னால், மம மநஸி — எனது மனஸ்ஸில், திமிரம் — அறியாமையாகிய இருள், வாரிதம் — போக் கடிக்கப்பட்டது.

ரத்தினத்தினொளியினால் புறவிருள் நீங்கும். எம்பெருமானாகிய ரத்தினத்தினால் அகவிருளாகிய அஜ்ஞானம் நீங்கும்ஜ்ஞானம் உண்டாகும். "மயர்வற மதிநலமருளினன்", என்றாரிறே ஆழ்வார். நிரவதிக நித்ய மஹஸா, நிர்மல முக்த அநுபந்த ஸுபகேந —

என்ற இரண்டு விசேஷணங்களாலே=எல்லை யில்லாத நித்யஸூரிகளாலே ஒளிபெறுபவன் என்றும், ஸம்ஸார ஸம்பந்தமாகிய மலமறப்பெற்று முக்தியடைந்தவர் களோடு தொடர்பினால் அழகுடையவன் என்றும் எம்பெருமான் கூறப்படும் பாங்கும் அறியத்தக்கது.

४२)अविरलविसृमरघृणिना हरिमणिना सततमाहितौज्ज्वल्यः।
घनकनककल्पितोऽयं कटको घटिकामहीभृतोभाति ॥

*(42)*அவிரளவிஸ்ருமரக்ருணிநா ஹரிமணிநா ஸததமாஹிதௌஜ்ஜ்வல்ய: ।
கநகநககல்பிதோऽயம் கடகோ கடிகாமஹீப்ருதோ பாதி ॥

(1)அவிரளவிஸ்ருமர க்ருணிநா — இடைவிடாமல் பரவுகிற ஒளியையுடைய, ஹரிமணிநா — பச்சைநிறமுள்ள மரகத ரத்தினத்தினால், ஸததம் — எப்பொழுதும், ஆஹித ஔஜ்ஜ்வல்ய: — உண்டு பண்ணப்பட்ட ப்ரகாசத்தை யுடையதாக, கநகநக கல்பித:—கட்டிப்பொன்னால் செய் யப்பட்ட, அயம் — இந்த, கடிகாமஹீப்ருத: கடக: — கடிகை மலையரசனுடைய கைவளையல், பாதி—விளங்குகிறது.

(2) அவிரள விஸ்ருமர க்ருணிநா — நெருக்கமாகப் பரவுகிற ஒளியையுடைய, ஹரிமணிநா — ஹரியாகிற எம்பெருமானாகிற ரத்தினத்தினால், ஸததம் ஆஹித ஔஜ்ஜ்வல்ய: — எப்போதும் உண்டாக்கப்பட்ட பள பளப்பையுடையதாக, கநகநககல்பித: — கட்டிப் பொன் னால் செய்யப்பெற்ற (= பொன்வர்ணமுள்ள) அயம் —இந்த, கடிகாமஹீப்ருத:—கடிகையென்னும் மலையினுடைய, கடக: — தாழ்வரை, பாதி — விளங்குகிறது. ஹரி: — (1)எம்பெருமான் (2)பச்சைநிறமுள்ளது. கடக:— (1) வளையல் (2) தாழ்வரை. மஹீப்ருத் — (1) அரசன் (2) மலை.

४३)सुमनोवृतेन मधुना सुतरां मधुरेण शुद्धिगुणभाजा ।
मम घटिकाचलजनुषा मानसनामा समुत्सुको भृङ्गः ॥

*(43)* ஸுமநோவ்ருதேந மதுநா ஸுதராம் மதுரேண சுத்திகுணபாஜா ।
மம கடிகாசலஜநுஷா மாநஸ நாமா ஸமுத்ஸுகோ ப்ருங்க: ॥

ஸுமநஸ்வ்ருதேந — *(1) மலர்களிலிருந்து ஸ்வீகரிக்கப்பட்டதும் (2) பண்டிதர்களாலே உபாயமாகவும் உபேயமாகவும் வரிக்கப்பட்டதும்,* ஸுதராம் மதுரேண — *மிகவும் இனிமையானதும்,* சுத்தி குணபாஜா *—(1) கசண்டற்றுத் தூய்மையானதும் (2) பரிசுத்தமானதும்,* கடிகாசல ஜநுஷா — *கடிகை மலையில் தோன்றியதுமான,* மதுநா *—(எம்பெருமானாகிய)தேனாலே,* மம — *அடியேனுடைய,* மாநஸநாமா ப்ருங்க: — *மனமென்னும் வண்டானது,* ஸமுத்ஸுக: ( பவதி ) *மிகவும் ஆசையுடையதாகிறது. அந்தத் தேனைப்பருக என்மனம் ஆசைப்படுகிறது என்றபடி.*

*தமது மனதை வண்டாகவும் எம்பெருமானைத் தேனாகவும் வருணித்தாராயிற்று. முதற்பொருள் தேனுக்கும் இரண்டாம் பொருள் எம்பெருமானுக்கும் இயையும். ஸுமநஸ:—மலர்களும் பண்டிதர்களும். ஆழ்வார்கள் இப்பெருமானை* அக்காரக்கனி *என்றார்கள். இவர்* அம்ருதபலம் *என்றும் திருப்பாற்கடல் என்றும் தேனென்றும் கூறுகிறார். இவையனைத்தும் மதுரதமமான வஸ்துக்களிறே.*

४४)अणुतरमपि स्वमन्यानर्पयतःसततमाप्तुकामेन ।
घटिकाचलप्रणयिना विपुलं विहितं हिरण्यदानमहो ॥

*(44)* அணுதரமபி ஸ்வமந்யாநர்ப்பயத: ஸததமாப்துகாமேந ।
கடிகாசலப்ரணயிநா விபுலம் விஹிதம் ஹிரண்யதாநமஹோ ॥

அணுதரமபி —மிகச்சிறியதாயிருந்த போதிலும், ஸ்வம் — பொருளை (பணத்தை) அர்ப்பயத: — தனக்குக் கொடுக்கிற, அந்யாந் — மற்றவர்களை, ஸததம் — எப்போதும், ஆப்துகாமேந — அடையவிரும்பித் தேடுகிற, கடிகாசல ப்ரணயிநா — கடிகை மலையில் அன்புமிக்க எம்பெருமானாகிற யாசகனாலே, விபுலம் — மிகப் பெரிதான, ஹிரண்ய தாநம் — ஸ்வர்ண தாநமானது விஹிதம் — செய்யப்பட்டது. அஹோ — ஆச்சரியம்.

தனக்குச் சிறிதாவது பொருள்கொடுப்பாருண்டா என்று தேடித்திரியுமவன் ஸ்வர்ணதாநம் செய்தானென்பது முரண்பட்ட விஷயம். இதற்குப் பரிஹாரம் — ஹிரண்யதானமாவது ஸ்வர்ணதானமன்று, ஹிரண்யனைப் பிளத்தலே யாகும் என்று பொருள்படுதலால் காண்க. தாநம் என்னும் சொல் தாஞ் - தாநே — என்ற தாதுவிலிருந்தும், தோ - அவகண்டநே—என்ற தாதுவிலிருந்தும் உண்டாகக் கூடியது. முதலது கொடுத்தலென்னும் பொருளையும், பின்னது பிளத்தலென்னும் பொருளையும் குறிப்பதாகும்.

४५)अननुगुणविषयदीक्षामनिदम्प्रथमा सरस्वती मुक्त्वा ।
घटिकाचलप्रणयिना घटयति दृष्टिं घनानुरागमयीम् ॥

(45)அநநுகுணவிஷயதீக்ஷாம் அநிதம்ப்ரதமா ஸரஸ்வதீ முக்த்வா ।
கடிகாசல ப்ரணயிநா கடயதி த்ருஷ்டிம் கநாநுராகமயீம் ॥

அநிதம் ப்ரதமா — அநாதியான, ஸரஸ்வதீ — வேதவாக்கானது, அநநுகுணவிஷயதீக்ஷாம் — (பகவத்சேஷமாகிய ஆத்மஸ்வரூபத்துக்குத்) தகாத சப்தாதி விஷய (ாநுபவத்)த்தில் உள்ள விரதத்தை(— நான் சப்தாதி விஷயங்களையனுபவிப்பேனே தவிர எம்பெருமானை அனுபவிக்க

மாட்டேனென்னும் ப்ரதிஜ்ஞையை) முக்த்வா — விடுவித்து, கடிகாசல ப்ரணயிநா — கடிகைமலையில் பற்றுமிக்க எம்பெருமானோடே, கன அநுராகமயீம் த்ருஷ்டிம் — நிறைந்த பக்தி மயமான எண்ணத்தை, கடயதி — சேர்ப்பிக்கிறது.

வேதவாக்கியங்களை அர்த்தத்தோடு தெரிந்து கொண்டால், விஷயாநுபவத்தில் ஆசை நசிக்கப் பெற்றுப் பரம புருஷனிடத்தில் பக்திரூபமான ஞான முண்டாகி பகவதனுபவம் கிடைக்குமென்றபடி. அநிதம்ப்ரதமா—இதுதான் வேதம் தோன்றிய முதற் காலம் என்பதில்லாதது — அதாவது எப்போது முள்ளதென்றபடி. இதுதான் மற்றவாக்குக்களுக்கும் வேத வாக்குக்குமுள்ள வேறுபாடு. முக்த்வா — அந்தர்ப்பாவிதணிஜந்தம்.

४६)दृश्येन दैवयोगात् दृप्यन्मनसा जराद्यतीतेन ।
साधयति सिद्धिमखिलां सङ्गो घटिकाद्रियोगिपुरुषेण ॥

(46) த்ருச்யேந தைவ யோகாத் த்ருப்யந்மநஸா ஜராத்யதீதேந ।
ஸாதயதி ஸித்திமகிலாம் ஸங்கோ கடிகாத்ரியோகிபுருஷேண ॥

ஜராஆதிஅதீதேந — கிழத்தனம் மரணம் முதலிய வற்றைக் கடந்தவனும், த்ருப்யத்மநஸா — (அது காரண மாக) மகிழ்ச்சி மிக்க மனமுடையவனும், தைவயோ காத்த்ருச்யேந — அதிர்ஷ்ட யோகத்தினால் காணத்தக்க வனுமான, கடிகாத்ரியோகிபுருஷேண — கடிகை மலையி லுள்ள — யோகஸித்திபெற்ற பரம புருஷனோடு, ஸங்க: — ஸம்பந்தமானது, அகிலாம் ஸித்திம் — எல்லா விதமான செல்வங்களையும், ஸாதயதி — சாதித்துக் கொடுக்கும்.

செல்வங்களாவன — இவ்வுலகிலும், ஸ்வர்க்கம் முதலிய உலகங்களிலும் அனுபவிக்கும் இன்பமும், பரம பதத்தில் அநுபவித்தற்குரிய பகவதனுபவ கைங்கரியங்களும் ஆகும். பகவானோடு ஸம்பந்தம் பகவத்க்ருபையினால் கிடைக்கும். அந்த பகவத் க்ருபைதான் இங்கு அத்ருஷ்டமெனப்பட்டது. அத்ருஷ்டமும் விதியும் ஒன்றே. விதிவாய்க்கின்று காப்பாரார் (— பகவத் க்ருபை பலிக்கும்போது தடுப்பார் ஆர்(திருவாய். 5—1—1) என்றவிடத்தில் விதிசப்தம் பகவத்க்ருபாவாசகமாக ப்ரஸித்தமிறே. பகவத் க்ருபையினால் பகவத்ஸம்பந்தமேற்பட்டபிறகு, அகிலஸித்திகளும் அந்த பகவத்க்ருபையினால் தான் உண்டாகும். ஆக பகவத்க்ருபையினால் பகவத்ஸம்பந்தமுண்டாகி, அதனால் பகவத்க்ருபை மேன்மேலும் பெருகி அதன் பிறகு ஸகல ஸித்திகளும் ஏற்படுமென்றபடி. ஸங்கம் — ஸம்பந்தம் — அன்பு என்றபடி 'அன்புக்கடியானதுவே — (பகவத் க்ருபையே) அடிசேருகைக்கும் (பலத்திற்கும்) ஸாதனம்' என்றாரிறே அழகியமணவாளப்பெருமாள் நாயனார் (ஆசார்ய ஹ்ருதயம் 114).

४७)प्रबलैर्ममेन्द्रियाश्वैः परिकृष्टा विषमविषयकान्तारे ।
पदवीं मनो रथोऽग्रयां प्राप्तो घटिकाद्रिपार्थसारथिना ॥

*(47)* ப்ரபலைர் மமேந்த்ரியாச்வை: பரிக்ருஷ்டா விஷமவிஷயகாந்தாரே।
பதவீம் மநோ ரதோऽக்ர்யாம் ப்ராப்தோ கடிகாத்ரிபார்த்தஸாரதிநா ॥

மம — அடியேனுடைய, மந: — மனமென்கிற, ரத: — தேரானது, (முதலில்) ப்ரபலை: — அதிகபலமுள்ள, இந்த்ரிய அச்வை : — செவி வாய் கண்முதலிய இந்த்ரியங்களாகிற குதிரைகளினால், விஷம விஷய காந்தாரே — கொடிய சப்தாதி விஷயங்களாகிற காட்டுவழியில், பரிக்ருஷ்ட: — நன்றாக

இழுத்துச் செல்லப்பட்டதாய், (பின்பு) கடிகாத்ரி பார்த்த ஸாரதிநா — கடிகைமலையிலுள்ள நரஸிம்மப்பெருமாளாகிற பார்த்த ஸாரதியினால், அக்ர்யாம் பதவீம் — உயர்ந்த பகவத் பாகவதா சார்யர்களாகிற வழியை, ப்ராப்த: — அடைந்தது.

ஸாரதியில்லாத தேரைப் பொரல்லாத குதிரைகள் கல்லும் முள்ளும் மிக்க காட்டுவழியில் இழுத்துச் சென்றன. ஸமர்த்தனான ஸாரதி தேருள்ள இடமறிந்து சென்று அதின்கண் ஏறிக்கொண்டு குதிரைகளை அடக்கி, அக்குதிரைகளின் வாயிலாகவே உயர்ந்த வழியில் இழுத்துச் செல்லுவது உலகவியல்பு. அது போன்று பகவத் க்ருபையில்லாத போது பொல்லாத இந்த்ரியங்களால் கொடிய விஷயங்களில் இழுத்துச் செல்லப்பட்ட மன மானது பகவானால் க்ருபையோடு அவ் விந்த்ரியங்களின் மூல மாகவே நல்லவழியை அடைவிக்கப் படுகிறதென்ற படி. நரஸிம்மப்பெருமாளே பார்த்தஸாரதி யாகையால் கடிகாத்ரிபார்த்தஸாரதி என்று நரஸிம்மப் பெருமாளைக் குறிப்பிட்டருளினார். மனம் ஏதாவதொரு விஷயத்தைப் பற்றியே நிற்கும். இது வரையில் நிக்ருஷ்ட விஷயத்தை பற்றிக்கொண்டு அலமந்த மனஸ்ஸு பகவத் க்ருபை யினால் உத்க்ருஷ்டவிஷயத்தைப்பற்றி நிலைத்து நின்ற தென்றார் இதனால்.

४८)अतिवेलविलसितोर्मेः अवगाहवतामधोनयनहेतोः ।
प्राप्तोऽस्मि भवपयोधेः पारं घटिकानियामकेनाहम् ॥

(48)அதிவேலவிலஸிதோர்மே: அவகாஹவதாமதோ நயனஹேதோ: ।
ப்ராப்தோऽஸ்மி பவபயோதே: பாரம் கடிகாநியாமகேநாஹம் ॥

**அதிவேலவிலஸித ஊர்மே:**— கரையைக் கடந்து வீசுகிற அலைகளையுடையதும், (அதனால்) அவகாஹவதாம் —

மூழ்கியவர்களை, அதநுயணஹேதோ: — அடியில் இழுத்துச் செல்வதற்குக் காரணமானதுமான, பவபயோதே: — ஸம்ஸாரமாகிற கடலினுடைய, பாரம் — அக்கரையை, கடிகா நியாமகேந — கடிகைமலையரசனாகிய படகோட்டியினாலே, அஹம் ப்ராப்த: அஸ்மி — அடியேன் அடைந்தவனானேன்.

நீசவிஷயங்களை அனுபவித்தனுபவித்து ஸம்ஸாரமாகிற கடலில் மூழ்கிக் கொண்டிருந்த அடியேனை, எம்பெருமான் படகோட்டியாக எழுந்தருளி க்ருபை செய்து அக்கடலின் அந்தண்டைக் கரையை அடைவித்தானென்றார். நியாமக: — (1) ஆணையிடுமரசன் (2) படகோட்டி.

४९)घटिका यदि गुणघटिताः घटिकाचलचक्रिकल्पिताःनस्युः ।
भवकूपतो जडानां भव्यः को वा समुद्धरणहेतुः ॥

(49) கடிகா யதி குணகடிதா: கடிகாசலசக்ரிகல்பிதா: ந ஸ்யு: ।
பவகூபதோ ஜடாநாம் பவ்ய: கோ வா ஸமுத்தரணஹேது: ॥

கடிகா: — (அறிவிலிகளின் வாழ்நாட்களில்) சில நாழிகைகள், குணகடிதா: — தன்னுடைய க்ருபை முதலிய குணங்களோடு சேர்க்கப்பட்டவைகளாக, கடிகாசலசக்ரிகல்பிதா:நஸ்யு: யதி — கடிகைமலையிலுள்ள சக்ரதாரியான எம்பெருமானால் ஆக்கப்படா விட்டால், ஜடாநாம் — அறிவற்ற ஜனங்களை, பவகூபத:— ஸம்ஸாரமாகிற கிணற்றிலிருந்து, பவ்ய:ஸமுத்தரணஹேது:— நல்லதான — மேலே தூக்குவதற்குக் காரணம், கோவா அஸ்தி — என்ன இருக்கிறது.

அறிவும் ஆற்றலுமுடையவர்கள் பக்தியோகம் முதலியவற்றை அநுஷ்டித்து ஸம்ஸாரமென்னும் கிணற்றிலிருந்து மேல் செல்லுகிறார்கள். அறிவாற்றலில்லாதவர் பகவானுடைய க்ருபை முதலிய குணங்களே

அக்கிணற்றிலிருந்து மேலெழு வதற்குக் காரணம் என்றபடியாம். 'நாஸெள புருஷகாரேண நசாப்யந்யேந ஹேதுநா, கேவலம் க்ருபயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந . (முற்கூறப்பட்ட நான் புருஷகாரமான பிராட்டிகாரணமாகவோ, பக்தி ப்ரபத்தி முதலிய வேறு காரணமாகவோ ஒருவனைக் கடாக்ஷிப்பதில்லை; என்னுடைய நிர்ஹேதுகமான க்ருபையினால் மட்டுமே யாரோவொருவனை ஏதோவொரு காலத்தில் கடாக்ஷிக்கிறேன் — லக்ஷ்மீதந்த்ரம்) என்று பகவான் கூறியபடி — அறிவற்ற ஜீவர்களை ஏதோவொரு காலத்தில் க்ருபையால் கடாக்ஷிக்கிறான் என்ற பொருளையே கடிகா: குணகடிதா: சக்ரி கல்பிதா:(—சில நாழிகைகளில் சக்ரதாரியானவன் அறிவிலிகள் விஷயத்தில் தனது க்ருபையை உபயோகப்படுத்துகிறான்,) என்றார். எம்பெருமான் அறிவிலிகளின் வாழ்நாளில் ஏதோவொருசமயத்தில் தன் க்ருபையை உபயோகிக்கா திருந்தால் அவர்கள் ஸம்ஸாரமாகிய அக்கிணற்றிலிருந்து மேலே வருவதற்கு — மோக்ஷம் பெறுவதற்கு வேறொரு உபாயமில்லை என்பது கருத்து. இங்கு வேறொரு பொருளும் தோன்றுகிறது.

சக்ரி கல்பிதா: கடிகா: குணகடிதா: யதி நஸ்யு: ஜட(ல)ாநாம் கூபத: ஸமுத்தரண ஹேது: கோ வா அஸ்தி?

என்று அந்வயித்தால், குயவனால் செய்யப்பட்ட பானைகள் தாம்புக்கயிறோடு சேர்க்கப்படாவிட்டால் கிணற்றிலிருந்து ஜலத்தை மேலே தூக்குவதற்கு வேறு உபாயம் என்ன இருக்கிறது—என்பதே அப்பொருள். டலயோ; அபேத: — ( ட , ல என்ற இரண்டும் ஒன்றே ) என்ற ந்யாயத்தைக் கொண்டு, ஜடாநாம் என்பது இப்பொருளில் ஜலாநாம் என்று கொள்ளப்பட்டது. கடிகா: (1) நாழிகைகள் (2) பானைகள். சக்ரீ —(1)சக்ரதாரியான எம்பெருமான், (2)பானை செய்வதற்காகச் சுழற்றப்படும் சக்கரத்தை யுடைய குயவன். குண: — (1) நல்லகுணம், (2) கயிறு.

முன்ச்லோகத்தில் ஸம்ஸாரத்தைக் கடலென்றார். இதில்கிணறென்றார். நீஞ்சத் தெரியாதவனுக்கு இவை யிரண்டும் உயிரை மாய்ப்பனவேயாகும்.

५०)कलयन्ति ये स्वयात्रां घटिकाचलवैद्य कल्पितेन पथा ।
भवरोगतोऽचिरात्ते मुक्ताः स्नानं चरन्ति विरजायाम् ॥

*(50)* **கலயந்தி யே ஸ்வயாத்ராம் கடிகாசலவைத்ய கல்பிதேந பதா ।**
**பவரோகதோऽசிராத்தே முக்தா: ஸ்நாநம் சரந்தி விரஜாயாம் ॥**

**யே** — *யார்,* **ஸ்வயாத்ராம்** — *தமது தேஹ யாத்ரையை (ஜீவதசையை),* **கடிகாசல வைத்ய கல்பிதேந பதா** — *கடிகை மலையிலுள்ள வைத்யனாகிற எம்பெருமானால் கற்பிக்கப் பட்ட வழியாலே,* **கலயந்தி** — *செய்கிறார்களோ (நடத்து கிறார்களோ)* **தே** — *அவர்கள்,* **பவ ரோகத:** — *ஸம் ஸாரமாகிய வியாதியிலிருந்து,* **அசிராத்** — *விரைவிலேயே,* **முக்தா:** — *விடுபட்டவர்களாய்க்கொண்டு,* **விரஜாயாம்**— *விரஜாநதியில்,* **ஸ்நாநம் சரந்தி** — *ஸ்நாநம் செய்கிறார்கள்.*

*மனிதர் தம் வாழ்நாள்களில் எம்பெருமான் கீதை முதலிய நூற்களில் மோக்ஷோபாயமாக விதித்த—தன்னையே உபாயமாகப் பற்றும்படி விதித்த வழியில் செல்வார்களாகில் விரைவிலேயே (—இப்பிறவியின் இறுதியிலேயே) ஸம்ஸாரமென்னும் நோயிலிருந்து விடுபட்டுச் சென்று விரஜையாற்றில் நீராடித் தூய்மை பெற்றுப் பரமபதம் செல்லுகிறார்கள் என்றபடி. ஸம்ஸாரத்தை இதில் வியாதியாகக் குறிப்பிட்டார்.*

*வைத்யன் சொல்லும் வழியில் நடப்பவர்கள் வியாதிதீரப்பெற்று — இத்தனைநாட்கள் ஸ்நாநம் செய்யாத குறை தீரும்படி ஸ்நாநம் செய்கிறா ரென்பதும் காண்க.*

५१)ददतो जगत्युदारान् स्वापेक्षितमर्थमर्थिनःप्राहुः ।
आददतःपुनरर्थान् उक्ताः घटिकाचलार्थिनोदाराः ॥

(51) தததோ ஜகத்யுதாராந் ஸ்வாபேக்ஷிதமர்த்த மர்த்திந: ப்ராஹு: ।
ஆதததஃ புநரர்த்தாந் உக்தா: கடிகாசலார்த்திநோதாரா: ॥

ஜகதி – உலகில், அர்த்திந: – யாசகர்கள், ஸ்வாபேக்ஷிதம் அர்த்தம் – தமக்குவேண்டியபொருளை, ததத: – கொடுப்பவர்களை, உதாராந் – கொடையாளிகளாக, ப்ராஹு:– சொல்லுகிறார்கள். கடிகாசலார்த்திநா புந: – கடிகைமலையிலுள்ள எம்பெருமானாகிற யாசகனாலோ வென்றால், (இதற்குமாறாக)(தன்னிடமிருந்து) அர்த்தாந் – பொருள்களை(—புருஷார்த்தங்களை) ஆததத – யாசித்துப் பெறுமவர்கள் உதாரா:—கொடையாளிகளாக, உக்தா:— சொல்லப் பட்டார்கள்.

உலகில் கொடுப்பவர்களே கொடையாளி களாகச் சொல்லப்படுகின்றனர்.'ஆர்த்தோஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப,' 'உதாரா: ஸர்வ ஏவைதே' (கீதை – அத்.7.16) இழந்த செல்வத்தை விரும்பும் ஆர்த்தனும், புதிதாகச் செல்வத்தை விரும்பும் அர்த்தார்த்தியும் ஆத்மாநுபவரூபமான கைவல்யத்தை விரும்பும் ஜிஜ்ஞாஸுவும் என்னுடைய அநுபவத்தை விரும்பும் ஜ்ஞாநியும் ஆகிய இவர்களனைவரும் (இவற்றை என்னிடமிருந்து யாசித்துப் பெற்றாலும் யாசகர்களல்லர், பின்னையோ வென்றால்) கொடையாளிகளேயாகிறார்கள் என்று – எம்பெருமான் யாசகர்களைக் கொடையாளிகளென்றது காணத்தக்கது. பொருளைக் கொடுப்பவர்கள்கொடையாளிகளல்லர், பொருளைக்கொடுப்பவர்களுக்குக் கொடையாளியாந்தன்மையைக் கொடுப்பவர்களே (யாசகர்களே) கொடையாளிகள் என்பது பரமோதார

ளான எம்பெருமானுடைய திருவுள்ளம். கர்ணனிடம் பிறர்யாசித்துப் பெற்ற பொருள் அப்பொழுதே அழிந்து விட்டது. கர்ணனுடைய கொடையாளியாந் தன்மை (கொடையாளி என்னும் பெயர்) இன்றும் அழியாமல் நிற்கிறது என்பது ஈண்டு நினைக்கத் தக்கது. பொருள் அநித்யம். புகழ் நித்யமிறே.

५२)दातेहिताधिकार्थान् स्वव्यतिरिक्तान् ददाति नात्मानम् ।
स्वोऽपि स्वसंश्रितेभ्यो दत्तो घटिकाद्रिनृहरिणा दात्रा ॥

(52)தாதேஹிதாதிகார்த்தாந் ஸ்வ்யதிரிக்தாந் ததாதி நாத்மானம் ।
ஸ்வோऽபி ஸ்வஸம்ச்ரிதேப்யோ தத்தோ கடிகாத்ரிந்ருஹரிணா தாத்ரா ॥

(உலகில்) தாதா — கொடையாளி, ஸ்வ ஸம்சரிதேப்ய:— தன்னையண்டினவர்களுக்கு, ஸ்வவ்யதிரிக்தாந் — தன்னை விட வேறான, ஈஹித அதிக அர்த்தாந் — (அவர்கள்) விரும்பி யதைக் காட்டிலும் அதிகமான பொருள்களை, ததாதி — கொடுக்கிறான். கடிகாத்ரி ந்ருஹரிணா தாத்ரா (கு) — கடிகை மலைநரசிங்கப் பெருமானாகிற கொடையாளியாலோ வென்றால், ஸ்வஸம் ச்ரிதேப்ய : — தன்னையடைந்தவர்களுக்கு ஸ்வ:அபி — தானும், தத்த : — கொடுக்கப்பட்டான்.

'யாசகர்களே உதாரர்கள், கொடுப்பவர்கள் உதாரரல்லர்' என்பது எம்பெருமான் திருவுள்ளமானாலும், உண்மையை ஆராய்ந்தால் எம்பெருமானே உதாரன் என்பது இக்கவி யின் திருவுள்ளமென்பது இந்த ச்லோகத்தில் விளங்கு கிறது. உலகில் கொடையாளிகள், யாசிப்பவர் விரும்பிய வற்றையோ அவற்றைக் காட்டிலும் அதிகமாகவோ கொடுப்பார் களேயன்றித் தன்னைக் கொடுக்கமாட்டார்கள். எம்பெருமான் தன்னையும் கொடுப்பான். ஆகையால் எம்பெருமானாகிய கொடையாளியே உயர்ந்தவனென்றதாயிற்று.

எம்பெருமான் யாசிப்பவர்களுக்குத் தன்னைக் கொடுப்பதாவது, அவர்கள் சொன்ன காரியத்தையெல்லாம் தான் செய்யுமளவுக்கு அவர்களுக்குத் தன்னை இட்ட வழக்காக்கி வைப்பது. கண்ணபிரான் அர்ச்சுநனுக்குத் தேரோட்டியதும் தூதுநடந்ததும், யதோக்தகாரியெம் பெருமான் திருமழிசைப்பிரான் பின்னே சென்றதும் திரும்பி வந்ததும், திருக்குடந்தை ஆராவமுதாழ்வார் திருமழிசைப் பிரானுக்கு எழுந்திருந்து பேசியதும் முதலிய சரித்திரங்களே, — பக்தர்களுக்கு எம்பெருமான் தன்னைக் கொடுத்தற்குப் போதுமான சான்று களாகும். 'ஸோபி', என்று பாடம் காண்கிறது. அதை விட ஸ்வோபி என்ற பாடமே சிறக்கும். எம்பெருமானால் அவனும் கொடுக்கப்பட்டான் என்பதை விட, எம்பெருமானால் தானும் கொடுக்கப்பட்டானென்ப தன்றோ ஸ்வரஸமாவது. பூர்வார்த்தத்தில் 'தத்வ்யதிரிக் தாந்' என்னாமல், 'ஸ்வவ்யதி ரிக்தாந்' என்றது இதை வலியுறுத்தும்.

५३)हिंसितदानवकरिणे हृदयगुहाविहितबहुविहाराय ।
विक्रमवते सपर्यां विदधे घटिकाद्रिवीरसिंहाय ॥

(53)ஹிம்ஸித தாநவகரிணே ஹ்ருதயகுஹாவிஹித பஹுவிஹாராய।
விக்ரமவதே ஸபர்யாம் விததே கடிகாத்ரிவீரஸிம்ஹாய ॥

விக்ரமவதே — பராக்ரமமுடையதாய், ஹிம்ஸித தாநவ கரிணே — ஹிரண்யாஸுரனாகிய யானையைக் கொன்றதும், ஹ்ருதயகுஹாவிஹிதபஹுவிஹாராய — (ஞானிகளின்) ஹிருதயங்களாகிய குகைகளில் பல விதமான விஹாரங்களைச் செய்வதுமான, கடிகாத்ரி வீரஸிம்ஹாய — கடிகைமலையிலுள்ள வீரசிங்கத்திற்கு, ஸபர்யாம் விததே — பணிவிடைகளைச் செய்கிறேன்.

பக்தர்களுக்குத் தன்னையே கொடுப்பவனுக்கு நீர் என்ன செய்யப்போகிறீர் என்ன, நான் என்னையே அவனுக்குக் கொடுக்கிறேனென்கிறார் இதனால். இவர் தம்மையே அவனுக்குக் கொடுத்தலாவது—தமது மனத்தை யும் வாக்கையும் உடலையும் அவனுக்கு ஸ்வாதீனமாக்கி, அவனை த்யானம் செய்வதும் அவனைப் புகழ்வதும், அவனை வணங்குவதுமாய் அவனுக்குத் தொண்டு செய்வதேயாகும்.

சிங்கம் பராக்ரமமுடையது—யானைகளைக் கொல்லு மது — குகையில் ஸஞ்சரிப்பது. அது போல் கடிகை மலைவீரசிங்கமும் உள்ளமை காண்க. எம்பெருமான் ஞானிகளின் ஹ்ருதய குகையில் விஹாரம் செய்வது 'நின்றதும்இருந்ததும்கிடந்ததும்என்நெஞ்சுளே' (திருச்சந்த விருத்தம் 64) 'தாமரைக்கண்ணன் என் நெஞ்சினூடே புள்ளைக்கடாகின்ற வாற்றைக் காணீர் ' (திருவாய். 7—3—1) முதலிய விடங்களில் காணத்தக்கது.

५४) श्रुतिपारगाय विद्यासूतिगृहाय स्वधर्मनिरताय ।
स्वं स्वोचितं प्रदास्ये सुधिये घटिकाद्रिभूमिदेवाय ॥

(54)ச்ருதிபாரகாய வித்யாஸூதிக்ருஹாய ஸ்வதர்மநிரதாய ।
ஸ்வம் ஸ்வோசிதம் ப்ரதாஸ்யே ஸுதியே கடிகாத்ரிபூமிதேவாய ॥

ச்ருதிபாரகாய — வேதங்களைக் கரைகண்டவனும், வித்யாஸூதிக்ருஹாய — சாஸ்திரஜ்ஞானத்திற்குப் பிறப்பிட மானவனும், ஸ்வதர்மநிரதாய — தனது வர்ணாச்ரம தருமங்களில் ஊன்றியவனும், ஸுதியே —(இச் செயற்கை யறிவேயன்றி) இயற்கையாகவே நல்லறிவு படைத்தவனு மாகிய, கடிகாத்ரி பூமிதேவாய — கடிகை மலை யிலுள்ள ப்ராஹ்மணனுக்கு, ஸ்வ உசிதம் — எனக்குத் தகுந்த, ஸ்வம் — சொத்தை, ப்ரதாஸ்யே — கொடுக்கக் கடவேன்.

ப்ராஹ்மணனுக்குத் தானம் செய்ய வேண்டுமென்று சாஸ்த்ரம் சொல்லுகிறது. 'வேங்கட வேதியனை' (பெரியதிருமொழி1–10–10) என்றும்,' உலகளப்பான் அடி நிமிர்த்த அந்தணனை' (பெரிய திருமொழி 5–6–7) என்றும் எம்பெருமானை ப்ராஹ்மணனாக ஆழ்வார் கள் அருளியது காண்க. ப்ராஹ்மணன் – வேதத்தைக் கண்டவன், சாஸ்த்ர அறிவுக்குப் பிறப்பிடமானவன், தனது தருமங்களில் ஊன்றியவன், புத்திமான். இவை யெல்லாம் எம்பெருமானுக்கும் ஒக்கும். மேலும் எம்பெருமான் தனது தருமமான ஆச்ரித ஸம் ரக்ஷணத்தில் ஊன்றியவனென்பதும் இங்குக் கருதுக. கவிக்குத் தனக்குரிய சொத்தாவது ச்லோகங்களே யாகும். இது மேல் ச்லோகத்தில் விளங்கும்.

५५)महनीयवृत्तवर्णा महितान्वयवत्यलङ्कृता कृतिना ।
सुक्तिसुतनुः प्रदेया शुद्धा घटिकाद्रिभूसुरवराय ॥

(55)மஹநீயவ்ருத்தவர்ணா மஹிதாந்வயவத்யலங்க்ருதா க்ருதிநா ।
ஸூக்தி ஸுதநு: ப்ரதேயா சுத்தா கடிகாத்ரி பூஸுரவராய ॥

மஹநீய வ்ருத்த வர்ணா – (1) பூஜிக்கத்தக்க ச்சந்தஸ்ஸும் எழுத்துக்களும் உடையதும்,(2)பூஜிக்கத்தக்க நடத்தையும் மேனி நிறமும் உடையவளும், மஹித அந்வயவதீ – (1) உயர்ந்த –சொற்களின் அந்வயமுடையதும், (–க்லிஷ்டாந்வய மில்லாமல் ஸுலபாந்வய முடையதும், (2) உயர்ந்த குடிப்பிறப்பையுடையவளும், அலங்க்ருதா – (1) சப்தாலங் காரங்களும் அர்த்தாலங்காரங்களும் உடையதும் (2) வஸ்த்ரா பரணங்களால் அலங்கரிக்கப்பட்டவளும், சுத்தா–(1) காவியக்குற்றமின்றி சுத்தமாயும், (2)நாண்மடம் அச்சம் முதலிய குணங்களினால் சுத்தையாயும்

ஸூக்தி ஸூநு: — ஸ்ரீஸூக்திகள் (ச்லோகங்கள்) என்கிற கந்யகையானவள், கடிகாத்ரிபூஸுரவராய — கடிகை மலையிலுள்ள ப்ராஹ்மணோத்தமனான எம்பெருமானுக்கு, க்ருதிநா — (1)பண்டிதனாலே (2)புண்ணியம் செய்தவனாலே, ப்ரதேயா — கொடுக்கத்தக்கவளாகிறாள்.

தம்முடைய ஸ்ரீஸூக்தியைக் கந்யகையாகக்கூறி, கடிகை மலையெம்பெருமானை ப்ராஹ்மணோத்தமனாகக் குறிப்பிட்டு, அவனுக்குத் தம் காவியமாகிய பெண்ணைத் தானம் செய்வது உசிதமென்கிறார் இதனால்.

५६)गां यो ददाति सार्थां धवलमतिप्रेमधारया सहिताम् ।
घटिकाचलप्रणयिने घटते किं तस्य कांक्षितं न फलम्॥

*(56)* காம் யோ ததாதி ஸார்த்தாம் தவளமதிப்ரேமதாரயா ஸஹிதாம் ।
கடிகாசல ப்ரணயிநே கடதே கிம் தஸ்ய: காங்க்ஷிதம் ந பலம் ॥

கடிகாசலப்ரணயிநே — கடிகைமலையில் பற்று வைத்த யாசகனுக்கு, ஸார்த்தாம் — (1) பொன்னோடு கூடிய (= கொம்புக்கும் குளம்புக்கும் பொன் கட்டு கட்டிய) (2) நல்ல அர்த்தத்தோடு கூடிய, காம் — (1) பசுவை, (2) ஸ்ரீ ஸூக்தியை (ச்லோகங்களை), தவளமதிப்ரேம தாரயா ஸஹிதாம் — (1)சுத்தமான எண்ணமும் ப்ரதீயுமாகிற நீர்த்தாரையோடு கூடியதாக, (2) சுத்தமான ஞானமும் பக்தியுமாகிற வற்றின் தொடர்ச்சியோடு கூடியதாக, ய: — எவன், ததாதி — கொடுக்கிறானோ, தஸ்ய — அவனுக்கு, காங்க்ஷிதம்பலம் — விரும்பிய பயன், கிம் ந கடதே— எதுதான் கை கூடாது?

இதில் ஸ்ரீஸூக்தியைப் பசுவாகக் கூறி அதனை எம்பெருமானுக்குத் தானம் செய்தால் எல்லா விருப்பங்களும் நிறைவேறுமென்று கூறினாராயிற்று.

இவ்விரண்டு ச்லோகங்களினாலும், 54ம் ச்லோகத்தில் தனக்குரிய சொத்து என்றதை விவரித்து அத்தகைய சொத்தான ஸ்ரீஸூக்தியை எம்பெருமானுக்குக் கொடுக்கக் கடவதாகவும், கொடுத்தால் எல்லா விருப்பமும் நிறை வேறுவதாகவும் அருளிச் செய்தாராயிற்று. ப்ரணயீ – (1) பற்றுடையவன் (2) யாசகன்.

५७)कलुषादिघटितवाक्यैः क्षाळितवैमुख्यकल्मषा धिषणा ।
पृथुगुणवती मदीया स्पृहयति घटिकाचलप्रियाय भृशम् ॥

(57)கலுஷாதிகடிதவாக்யை: க்ஷாளித வைமுக்ய கல்மஷா திஷணா ।
ப்ருதுகுணவதீ மதீயா ஸ்ப்ருஹயதி கடிகாசலப்ரியாய ப்ருசம் ॥

கலுஷ ஆதி கடிதவாக்யை : – மனத்தின்கண் (உள்ள) அழுக்கைப் போக்கடிப்பவைகளாகத் தானே சேர்ந்த வேத வாக்கியங்களாலே, அல்லது மஹர்ஷிகளாலே சேர்க்கப் பட்ட இதிஹாஸபுராண வாக்கியங்களாலே, க்ஷாளிதவைமுக்யகல்மஷா – கழுவப்பட்ட – எம்பெரு மானிடம் பராமுகமாயிருத்தலாகிற அழுக்கையுடைய, மதீயாதிஷணா – என்னுடைய புத்தியானது, ப்ருது குணவதீ – அதிகமான – எம்பெருமானுக்கு நேர் முகமாக இருத்தலென்னும் குணத்தையுடையதாய்க் கொண்டு, கடிகாசலப்ரியாய – கடிகைமலைநாயகன் பொருட்டு, ப்ருசம்–மிகவும், ஸ்ப்ருஹயதி – ஆசைப்படுகிறது.

மனதின்கண் உள்ள அழுக்காவன – நான் ஸ்வ தந்த்ரன் என்னும் அஹங்காரமும், உலகிலுள்ள பொருள்கள் யாவும் என்னுடையவையே என்னும் மமகாரமுமாகும். இப்படிப்பட்ட அழுக்குக்களை – எம் பெருமானொருவனே ஸ்வதந்த்ரன், மற்ற ஜீவாத்மாக்கள் மற்றுமுள்ள ஜடப்பொருள்களனைத்தும் அப்பெருமானுக்குப் பரதந்திரமானவையே என்ற கருத்துக்களைக் கொண்ட

வேதவாக்கியங்கள் அல்லது இதிஹாஸபுராண வாக்கியங்கள் போக்கடிக்கின்றன. இக்கருத்து மனத்தின் கண் ஊறஊற மனிதர்களின் எண்ணத்தில் பகவத்வை முக்யம் நசிக்கப்பெற்று ஸௌமுக்யமென்னும் குணம் அதிகமாக உண்டாகும். அக்குணமுண்டாகவே பகவானிடம் மிக்க ஆசை உண்டாகும் என்பதைக் கவி தம்மோடு தொடர்பு படுத்திக் கூறினாராயிற்று இதனால் வைமுக்யம் — எம்பெருமானிடம் பாரமுகமாக இருத்தல். ஸௌமுக்யம் —நேர்முகமாக இருத்தல் . அதாவது சிறிது ஆசையுண்டாகப் பெறுதல். அந்நிலைமை நீடிக்கப்பெற்றால் சில நாட்களில் அதிகமான ஆசையாகிய பக்தி உண்டாகு மென்றபடி. கலுஷம் — காலுஷ்யம் — அழுக்கு. கலுஷம் அதந்தீதி — கலுஷாதீநி, கலுஷாதீநி, ச தாநி — கடிதாநிச — கலுஷாதி கடிதாநி,—கடிதாநிச தாநி வாக்யாநிச என்று விக்ரஹவாக்யம். அதபக்ஷணே என்ற தாதுவின் மேல் ணிநிப்ரத்யயம் சேர்ந்தால் ஆதி என்ற ரூபம் நிஷ்பந்நமாகும். இது நகாரந்த நபும்ஸகலிங்க சப்தம். நாசம் பண்ணுமது என்பது இதன் பொருள். கடித வாக்யாநி— தாமே சேர்ந்த வேத வாக்கியங்கள் — வேதம் அபௌருஷேயமாகையாலே. கடிதவாக்யாநி — மஹர்ஷிகளாலே சேர்க்கப்பட்ட இதிஹாஸபுராணவாக்யங்கள். கடிதமென்பதில் முந்தின பக்ஷத்தில் கர்த்தரியிலும் பிந்தின பக்ஷத்தில் கர்மணியிலும் 'க்த' ப்ரத்யயம் வந்துள்ளது.

५८)अन्विष्यतां स्वमथवा तूष्णीमाध्वं सुरर्षिपितृमुख्याः ।
तत्किङ्करोऽर्पितोऽहं तज्ज्ञैः घटिकाद्रिभूभुजे सचिवैः ॥

(58)அந்விஷ்யதாம் ஸ்வமதவா தூஷ்ணீமாத்வம் ஸுரர்ஷிபித்ருமுக்யா: ।
தத்கிங்கரோऽர்ப்பிதோக்ஹம் தத்ஜ்ஞை: கடிகாத்ரிபூபுஜே ஸசிவை:॥

ஸுர ருஷி பித்ருமுக்யா: — தேவதைகள் ருஷிகள் பித்ருக்கள் முதலியவர்களே!, ஸ்வம் அந்விஷ்யதாம் - உங்களுடைய சொத்து தேடப்படட்டும், அதவா — அல்லது (சொத்தே வேண்டா மென்றால்) தூஷ்ணீம் ஆத்வம் — வெறுமனே இருங்கள். (எங்களுடைய சொத்தாக நீ இருக்க, நாங்கள் தேடுவதும், வேண்டாவிடில் வெறுமனே இருப்பதும் எதற்கு என்றால் பதில் கூறுகிறார் — நான் பகவானுடைய சொத்தாக ஆகிவிட்டே னென்று) அஹம் — நான், கடிகாத்ரிபூபுஜே — கடிகைமலை யரசனான எம்பெருமானுக்கு, தத்ஜ்ஞை: — அவனைப் பற்றி அறிந்த — தத்வஜ்ஞாநிகளான, ஸசிவை: — மந்த்ரிகளாலே — பாகவதர்களாலும் ஆசார்யர்களாலும், தத்கிங்கர: — அவ்வெம்பெருமானுடைய தொண்டனாக, அர்ப்பித: — ஸமர்ப்பிக்கப்பட்டேன்.

53ம் ச்லோகத்தில் — பகவானுக்குக் கைங்கர்யம் செய்வேனென்றார். 54,55,56,ம் ச்லோகங்களில் வாசிக கைங்கர்யம் செய்வதாகக் கூறினார். 57ல் இங்ஙனம் கைங்கர்யம் செய்வதற்குக் காரணமான பக்தி தமக்கு எம்பெருமானிடம் உண்டானதாகச் சொன்னார். இதைக் கேட்ட தேவர்ஷி பித்ருக்கள் — இது வரையில் எங்களுக்குத் தொண்டு செய்து கொண்டிருந்த நீ, எப்பொழுது இப்படி மாறிவிட்டாய் என்று கேட்க, விடையிறுக்கிறார் இதனால். பகவத் க்ருபையால் பாகவதர்களோடு ஸஹவாஸம் உண்டாக, அவர்கள் என்னை ஸதாசார்யனோடு சேர்க்க, அவ்வாசார்யர் என்னை பகவத்தாஸனாகச் சேர்த்துவிட்டார். இனி உங்களுக்கும் எனக்கும் ஒரு ஸம்பந்தமுமில்லை. உங்களுக்கு சொத்து வேண்டுமென்றால் வேறுயாரையாவது தேடிப் பிடித்துக் கொள்ளுங்கள், இல்லையேல் வாளாவிருங்க

ளென்று அவர்களிடம் அறைகூவுகிறார் இதனால் என்க.

தேவர்ஷிபூதாப்த ந்ருணாம் பித்ரூணாம் ந கிங்கரோ நாயம்ருணீச ராஜந் ।
ஸர்வாத்மநா ய: சரணம் சரண்யம் நாராயணம் லோககுரும் ப்ரபந்ந: ॥

(ஸ்ரீ பாகவதம் 11–5–41) — அரசே எவனொருவன் சரணமடையத்தக்கவனாய் (சீலமும் சக்தியுமுடையவனாய்) லோகபிதாவான நாராயணனை எல்லாவிதத்தாலும் சரணமடைந்தானோ, அவன் — தேவர்களுக்கும் ரிஷிகளுக்கும் பூதங்களுக்கும் பந்துக்களுக்கும் பித்ருக்களுக்கும் அடிமைப்பட்டவனல்லன், கடன்பட்டவனுமல்லன் என்ற ச்லோகம் இங்கு நினைக்கத்தக்கது. இது கரபாஜந முனிவர் நிமியரசனுக்கு உபதேசித்தது.

५९)नृत्यन्त्यनर्थकं ये गोष्ठे घटिकामहीभृतो हरये ।
मन्ये मन्दधियस्तान् मातङ्गानेव मदजुषः कलुषान् ॥

(59)ந்ருத்யந்த்யநர்த்தகம் யே கோஷ்ட்ரே கடிகாமஹீப்ருதோ ஹரயே ।
மந்யே மந்ததியஸ் தாந் மாதங்காநேவ மதஜுஷ: கலுஷாந் ॥

கடிகாமஹீப்ருத: கோஷ்ட்ரே — கடிகைமலையின் அரசனாகிய, ஹரயே — (நர)ஸிம்மத்தின் பொருட்டு, யே— யார், அநர்த்தகம் — வ்யர்த்தமாக (—பயனின்றி) ந்ருத்யந்தி — கூத்தாடுகின்றார்களோ, தாந் — அத்தகைய, மந்ததிய: — புத்தி குறையப் பெற்றவர்களை, கலுஷாந் — அறிவுகலங்கிய, மதஜுஷ: — மதம்பிடித்த, மாதங்காந்ஏவ — யானைகளாகவே, மந்யே — கருதுகிறேன்.

கடிகைமலையெம்பெருமானுக்குத் தொண்டராகிய தமக்கு விபரீதரானவர்களை—பகவத் த்வேஷிகளை நிந்திக்கிறார் இதனால், மதம் பிடிக்காத யானை சிங்கத்தின்

எதிரில் செல்லவே செல்லாது. மதம் பிடித்த யானை அறிவுகலங்கிச் சிங்கத்தின் எதிரே சென்று ஆடுவதும் பிளிறுவதுமாக இருந்தால் அது சிங்கத்தினால் கொல்லப்படுவது உறுதி. அது போலவே நரசிங்கப் பெருமானெதிரில் வந்து அவனை மதியாமல் கூத்தாடுவர்களேல் அவர்கள் ஸ்வரூப நாசம் பெறுவது உறுதி என்று இதனால் குறித்து அருளினார்.

६०)दुष्टान् निगृह्य तरसा शिष्टानखिलांश्चिरेण पालयते ।
स्वस्ति सुहृदे गुणानां भूत्यै घटिकाद्रिभूभुजे भूयात् ॥

**(60)துஷ்டாந் நிக்ருஹ்ய தரஸா சிஷ்டாநகிலாந் சிரேண பாலயதே ।
ஸ்வஸ்தி ஸுஹ்ருதே குணாநாம் பூத்யை கடிகாத்ரிபூபுஜே பூயாத் ॥**

துஷ்டாந் — துஷ்டர்களை, தரஸா — விரைவிலேயே, நிக்ருஹ்ய — தண்டித்து, சிஷ்டாந் அகிலாந் — நல்லோர்கள் அனைவரையும், சிரேண — வெகுநாட்களாகவே, பாலயதே — காப்பாற்றிவருமவனும், ஸுஹ்ருதே — நல்ல மனமுடையவனும், குணாநாம் பூத்யை — நற்குணங்களுக்கு இருப்பிடமானவனுமான, கடிகாத்ரிபூபுஜே — கடிகைமலையரசனுக்கு, ஸ்வஸ்தி பூயாத் — க்ஷேமம் உண்டாயிடுக.

58ம் ச்லோகத்தில் தாம் பகவத்கிங்கரரானமையத் தெரிவித்து மகிழ்ந்து, 59ல் பகவத் த்வேஷிகளை நிந்தித்து, இப்படி துஷ்டர்களையழித் தலையும் சிஷ்டர்களைக் காத்தலையும் தொழிலாகக் கொண்ட எம்பெருமான் தன்மைக்குத் தோற்று அவனுக்குப் பல்லாண்டு பாடினாராயிற்று இதனால்.

६१)मृदुलं भवाग्निपाकात् व्याप्तं गुणतो विशुद्ध महमन्नम् ।
भोज्यं समर्पये स्वं भोक्त्रे घटिकाचलस्य सस्नेहम् ॥

(61)ம்ருதுளம் பவாக்நிபாகாத் வ்யாப்தம் குணதோ விசுத்தமஹமந்நம் ।
போஜ்யம் ஸமர்ப்பயே ஸ்வம் போக்த்ரே கடிகாசலஸ்ய ஸஸ்நேஹம் ॥

பவஅக்நி பாகாத் — ஸம்ஸாரமென்னும் அக்நியால் சமைக் கப்பட்டதனால், ம்ருதுளம் — (1) மெத்தென்றிருப்பதும் (2) மனம் கனியப் பெற்றவனும், குணத : — (1) சுவையாகிற குணத்தினால் நிறைந்ததும் (2) சமதமாதி குணங்களினால் நிறைந்தவனும், விசுத்தம் — (1) மிகவும் சுத்தமானதும் (2) மி கவும் பரிசுத்த மானவனும், போஜ்யம் — உண்ணத் தக்கதுமான, அந்நம் - அந்நமாக, போஜ்யம் ஸ்வம் — அனுப விக்கத்தக்கவனுமான தன்னை (= என்னை) கடிகாசலஸ்ய போக்த்ரே — கடிகை மலையிலுள்ள (1)உண்ணுமவன் பொருட்டு (2) அனுபவிப்பவன் பொருட்டு, ஸஸ்நேஹம் — (1) நெய்யோடு கூட (2) பக்தியோடு கூட, ஸமர்ப்பயே — ஸமர்ப்பிக்கிறேன்.

இதில் எறும்பியப்பா கடிகைமலை யெம்பெரு மானுக்குத் தம்மை அந்நமாக ஸமர்ப்பிக்கிறார். (1) என்று குறிக்கப்பட்ட விசேஷணங்கள் அந்நத்துக்கும், (2) என்று குறிக்கப்பட்ட விசேஷணங்கள் — ஸ்வம் என்பதனால் சொல்லப்பட்ட தமக்கும் (எறும்பிஅப்பாவுக்கும்) பொருத்துக.

அந்நம் சமைக்கப்பட்டு மெத்தென்றிருக்கும், சுவைக்குணம் நிறைந்திருக்கும், தூய்மை பெற்றிருக்கும், நெய்சேர்ந்திருக்கும். இப்படிப்பட்ட அந்நமே உண்பவனுக்கு உண்ணத்தக்கது. அங்ஙனமே அப்பாவும் ஸம்ஸாராக் நியினால் சமைக்கப்பட்டு முரட்டுத்தனம் நீங்கி மெத்தென் றிருப்பார். மனவடக்கம் பொறி யடக்கம் முதலிய குணங்கள்

நிறையப்பெற்றிருப்பர். அதனால் தூய்மை பெற்றிருப்பர். பகவானிடம் பக்தியுடனிருப்பர். இப்படிப்பட்ட இவர் —அனுபவிக்கின்ற பகவானுக்கு அனுபவிக்கத் தக்க வராயிருப்பர் என்றபடி.

६२)नित्यश्रिये गुणानां निधये निष्ठ्यूत निखिल दोषाय ।
प्रज्ञाऽर्पिता मयैषा भर्त्रे घटिकाचलस्य भाग्यवशात् ॥

**(62)நித்யச்ரியே குணாநாம் நிதயே நிஷ்ட்யூத நிகில தோஷாய ।**
**ப்ரஜ்ஞாऽர்ப்பிதா மயைஷா பர்த்ரே கடிகாசலஸ்ய பாக்யவசாத் ॥**

**நித்யச்ரியே** — *பிராட்டியோடு எப்போதும் கூடியிருப் பவனும், (அதுகாரணமாக)* **நிஷ்ட்யூத நிகில தோஷாய** — *காறியு மிழப்பட்ட எல்லாக்குற்றங்களையுமுடையவனும்,* **குணாநாம் நிதயே** — *நற்குணங்களுக்கு நிதிபோன்றவனுமான,* **கடிகா சலஸ்ய பர்த்ரே** — *கடிகாசலத்தில் வாழும் எம்பெருமா னாகிய கணவனுக்கு,* **பாக்யவசாத்** — *(என்னுடைய) அத்ருஷ்ட வசத்தினால்,* **மயா** — *என்னால்,* **ஏஷா ப்ரஜ்ஞா** — *இந்த ப்ரஜ்ஞை என்னும் கன்னிகை.* **அர்ப்பிதா** — *ஸமர்ப்பிக்கப்பட்டாள்.*

இங்கு ப்ரஜ்ஞையாவது இடையறாமல் எம்பெரு மானை நினைத்தலாகிய ஜ்ஞான விசேஷம். இதுவே பக்தி யெனப்படும். இது தன்னை அவனுக்குக்கொடுத்தலாவது அவனையே எப்போதும் நினைத்தல் என்றபடி . அல்லது தத்வஹித புருஷார்த்த விஷயமான புத்தியும் ப்ரஜ்ஞையா கலாம். இதை அவனுக்கு ஸமர்ப்பித்தலாவது எம்பெரு மானையே பரதத்துவமாகவும் மோக்ஷோபாய ரூபமான ஹிதமாகவும் புருஷார்த்தமாகவும் அறுதியிட்டிருக்கை யாகும். எம்பெருமானை பர்த்தா என்று குறித்துள்ளதற் கேற்ப, ப்ரஜ்ஞை கன்னிகையாகக் கருதப்பட்டது. ஆக

பிராட்டியின் நித்யயோகத்தினால் குற்றமாகிய ஸ்வாதந்த்ரியம் தலைமடிந்து, அதனால் தலையெடுத்த வாத்ஸல்யாதி குணங்களையுடைய எம்பெருமானாகிய மணவாளப் பிள்ளைக்கு தமது ப்ரஜ்ஞையாம் கன்னிகையைக் கைப்பிடிக்கும்படி ஸமர்ப்பித்தாராயிற்று இதனால். "ஒண்தாமரையாள் கேள்வ னொருவனையே நோக்கு முணர்வு" தான் உணர்வாவது. அதுவே இங்கு ப்ரஜ்ஞையாகக் குறிப்பிடப்பட்டது என்க.

६३)पात्रे समाश्रितानां शात्रे सत्पुरुषविद्विषां सततम् ।
दात्रे सकलफलानां नेत्रे जगतां नमो नृसिंहाय ॥

*(63)* பாத்ரே ஸமாச்ரிதாநாம் சாத்ரே ஸத்புருஷ வித்விஷாம் ஸததம் ।
தாத்ரே ஸகலபலாநாம் நேத்ரே ஜகதாம் நமோ ந்ருஸிம்ஹாய ॥

ஸததம் — எப்போதும், ஸமாச்ரிதாநாம் — தன்னையடைந்தவர்களை, பாத்ரே — காப்பவனும், ஸத்புருஷ வித்விஷாம் — (தன்னையடைந்த) ஸத்புருஷர்களின் பகைவர்களை, சாத்ரே — மெலிவுறச் செய்பவனும் (அழிப்பவனும்), ஸகல பலாநாம் — எல்லாவிதமான பலன்களையும், தாத்ரே — (தன்னையடைந்தவர்களுக்குத்) தருமவனும் (இங்ஙனமாக) ஜகதாம் — உலகத்திலுள்ளோர்க்கு, நேத்ரே — நாயகனாகிய, ந்ருஸிம்ஹாய — நரஸிம்ஹப் பெருமாளுக்கு, நம:— நமஸ்காரம்.

முன் ச்லோகத்தில் எம்பெருமானே தத்வமும் ஹிதமும் புருஷார்த்தமும் என்றறுதியிடுதற்குரிய ப்ரஜ்ஞையை உடையவராகத் தம்மைக் குறிப்பிட்டவர் அந்த ப்ரஜ்ஞைக்குத் தக்கபடி எம்பெருமானுக்கு நமஸ்காரம் செய்கிறார் இதுதன்னில். அவனே பரதத்துவம்

(= சேஷி) என்றறிந்தாலும், அவனே ஹிதம் (மோக்ஷோபாயம்) என்றறிந்தாலும், அவனே புருஷார்த்தம் (ப்ராப்யம்) என்றறிந்தாலும் அவனுக்கு நமஸ்காரம் செய்யவேணுமிறே. அதனாலன்றோ திருமந்த்ரத்தில் நடுவிலுள்ள நம: பதத்தை ஆவ்ருத்திசெய்து — சேஷியைச் சொல்லும் ப்ரணவத்தோடும் உபாயத்தைச் சொல்லும் நம: பதத்தோடும், ப்ராப்யத்தைச் சொல்லும் நாராயணாய என்னும் பதத்தோடும் ஆசார்யர்கள் கூட்டி அர்த்தம் அருளிச்செய்வது. விவரம் ரஹஸ்யக்ரந்தங்களில் காண்க.

६४)सुमनस्समूहभव्यात् शुकमुखसेव्यात् सुशीतलच्छायात् ।
घटिकाद्रितटनिरूढात् कल्पकतः कस्य काङ्क्षितं न फलम् ॥

(६4) ஸுமநஸ்ஸமூஹபவ்யாத் சுகமுகஸேவ்யாத் ஸுசீதளச்சாயாத் ।
கடிகாத்ரிதட நிரூடாத் கல்பகத: கஸ்ய காங்க்ஷிதம் ந பலம் ॥

ஸுமநஸ்ஸமூஹ பவ்யாத் — (1) தேவதா ஸமூஹத்திற்கு க்ஷேமமளிப்பவனும்,(2) புஷ்ப ஸமூஹத் தினால் மங்களமானதும், சுகமுகஸேவ்யாத் — (1) சுக முனிவர் முதலியவர்களாலே ஸேவிக்கத் தக்கவனும், (2) கிளி முதலிய பக்ஷிகளாலே அடையப்பெற்றதும், ஸுசீதளச்சாயாத் — மிகக் குளிர்ந்த காந்தியை உடை யவனும் (2) மிகக் குளிர்ந்த நிழலையுடையதும், கடிகாத்ரி தட நிரூடாத் — கடிகைமலைத்தாழ்வரையில் (1) தோன்றியவனுமான (2) முளைத்ததுமான, கல்பகத:— (1) எம்பெருமானாகிய (2) கற்பகமரத்தினிடமிருந்து, கஸ்ய — யாருக்கு, காங்க்ஷிதம் பலம் (1) விரும்பிய பலன் (2) விரும்பிய பழம், ந(லப்யேத) கிடைக்காது.

முன் ச்லோகத்தில் எல்லாப் பலன்களையும் தருமவன் என்று அந்வயத்தினால் (— உடன் பாட்டினால்) அருளிச் செய்தவர், அதுதன்னை திடப்படுத்துவதற்காக இந்த ச்லோகத்தில், யாருக்கு என்ன பலன் கிடைக்காது என்று வ்யதிரேகத்தினால் (எதிர்மறையினால்) அருளிச்செய்கிறார். மேலும் எம்பெருமானை எல்லாப் பயன்களையும் எல்லாப் பழங்களையும் கொடுக்கும் கற்பகமரமாக ரூபணம் செய்கிறாரிது தன்னில். எம்பெருமானுக்கும் கற்பகத் தருவுக்கும் பொருந்தும்படி சிலேடையில் விசேஷணங் களையமைத்துள்ளமை காண்க.

६५)अविरतहितप्रवृत्तेः आपदि सहितात् अकृत्रिमस्नेहात् ।
मम घटिकाचलबन्धोः मान्यादन्येन केन किं कार्यम् ॥

(65) அவிரதஹிதப்ரவ்ருத்தே: ஆபதி ஸஹிதாத் அக்ருத்ரிம ஸ்நேஹாத் ।
மம கடிகாசலபந்தோ: மாந்யாதந்யேந கேந கிம் கார்யம் ॥

அவிரதஹித ப்ரவ்ருத்தே: — இடைவிடாமல் நமக்கு நன்மை செய்வதில் முயலுமவனும், ஆபதி — ஆபத்து வரும்போது, ஸஹிதாத் — நம்மைவிடாமல் கூடவே இருப்பவனும், (அவ்விரண்டிற்கும் உதவியாக) அக்ருத்ரிம ஸ்நேஹாத் — இயற்கையான (—கபடமற்ற) நட்புடையவனும், மாந்யாத் — (அதனால்) கௌரவிக்கத் தக்கவனுமாகிய கடிகாசல பந்தோ: — கடிகை மலையிலுள்ள பந்துவான எம்பெருமானை விட, அந்யேந — வேறான, கேந — யாராலே, மம — எனக்கு, கிம்கார்யம் — எந்த காரியம் (ப்ரயோஜனம்), பவேத் — உண்டாகக் கடவது.

உண்மையான பந்துவுக்கு லக்ஷணம் — கபடமற்ற நட்பும், எப்போதும் தன் நண்பனுக்கு நன்மை செய்யும்

முயற்சியுடைமையும், ஆபத்துவந்தால் கூடவே இருந்து உதவிசெய்வதுமாகும். அத்தகைய லக்ஷணம் எம்பெருமான் தவிர வேறு யாரிடமும் இல்லாமையால் அவனைத் தவிர்ந்த யாரால் எனக்கு என்ன காரியம் ஆக வேண்டியிருக்கிறதென்றார் இதனால். எம்பிரானெந்தை என்னுடைச் சுற்றம் (பெரியதிருமொழி 1–1–6) என்று தொடங்கிக் கலியன், ஸர்வேச்வரனே எல்லா விதபந்துவுமாவான் என்றருளிச்செய்தாரிறே.

६६)घनकरुणामृतपूरैः घटिकाचलकृष्णमेघतो जनितैः ।
पापाटवी प्रदग्धा भजते चित्रं भवाम्बुधिः शोषम् ॥

*(66)* கநகருணாம்ருதபூரை: கடிகாசலக்ருஷ்ணமேகதோ ஜநிதை: ।
பாபாடவீ ப்ரதக்தா பஜதே சித்ரம் பவாம்புதி: சோஷம் ॥

கடிகாசல க்ருஷ்ண மேகத: — கடிகைமலையிலுள்ள எம்பெருமானாகிய கறுத்த மேகத்தாலே, ஜநிதை: — உண்டு பண்ணப்பட்ட, கநகருணா அம்ருதபூரை: — பெருங்கருணையாகிற அம்ருதப்ரவாஹங்களினால், பாப அடவீ — எனது பாவங்களாகிய காடு, ப்ரதக்தா — நன்றாகக் கொளுத்தப் பட்டது; பவஅம்புதி: — (எனது) ஸம்ஸாரமாகிய கடல், சோஷம் பஜதே — வற்றுதலை அடைகிறது. சித்ரம் — இது ஆச்சரியம்.

கொளுத்தும் சக்தியும் வற்றச்செய்யுமாற்றலும் நெருப்புக் கிருக்க, இதில் கருணாம்ருதப்ரவாஹத்திற்குப் பாவங்கொளுத்து மாற்றலும் பிறவிக்கடலைவற்றச் செய்யும் சக்தியும் உண்டானதாகச் சொல்லியதனால் இது ஆச்சரியமென்றார். குளிர்ந்த கருணையை நெருப்பென்னமாட்டாமல் அம்ருதப்ரவாஹ மென்றார் என்க. இதில் எம்பெருமானை — கைம்மாறு கருதாமல் மழைபொழியும் கார்மேகமென்றார்.

६७)गोभिः प्रकाशितार्थात् गोत्रे घटिकाभिधानवत्युदितात् ।
जागर्ति सततनिद्रं सवितुर्जगतां मनस्सरोजं मे ॥

*(67)* கோபி: ப்ரகாசிதார்த்தாத் கோத்ரே கடிகாபிதாநவத்யுதிதாத் ।
ஜாகர்த்தி ஸததநித்ரம் ஸவிதுர்ஜகதாம் மநஸ்ஸரோஜம் மே ॥

கோபி: *(1) தனது கிரணங்களினால் (2) (கீதை சரமச்லோகம் முதலிய) தனது ஸ்ரீஸூக்திகளினால்,* ப்ரகாசித அர்த்தாத் – *(1) உலகிலுள்ள பொருள்களைக் கண்களுக்குக் காட்டுபவனும் (2) சாஸ்த்ரார்த்தங்களை விளங்கச்செய்பவனும்,* கடிகாஅபிதாநவதிகோத்ரே – *கடிகை யென்னும் பெயர் பெற்ற மலையில்,* உதிதாத் – *தோன்றி யவனுமான,* ஜகதாம் ஸவிது: – *(1) உலகங்கட்கு ஸூர்ய னானவனிடமிருந்து, (2) உலகங்களையுண்டாக்கிய எம் பெருமானிடமிருந்து,* ஸதத நித்ரம் *(1)எப்போதும் கூம்பியேருக்கிற (2) எப்போதும் அறியாமையாகிய தூக்கங்கொண்டிருக்கிற,* மே – *என்னுடைய,* மந: ஸரோஜம்– *தாமரைபோன்ற மனஸ்ஸானது,* ஜாகர்த்தி – *(1) மலர்ச் சியை அடைகிறது (2)அறிவாகிய மலர்ச்சியைப் பெறுகிறது.*

*கௌ: – கிரணமும் வாக்கும். கோத்ரம் – மலை. ஸவிதா–ஸூர்யனும், உலகங்களைப் பெற்ற எம்பெருமானும் இதில் எம்பெருமானைச் சூரியனாகப் பேசியனுபவித்தார். விசேஷணங்களின் பொருள் களைத் தனித்தனியே காண்க.*

६८)रुष्टेन येन रुद्रो रुग्णो धरणीं जगाम शरभोऽपि ।
घनदुरितदन्तिनोऽस्मात् घटिकाद्रिहरेः कथं न बिभ्यतु मे ॥

*(68)* ருஷ்டேந யேந ருத்ரோ ருக்ணோ தரணீம் ஜகாம சரபோऽபி ।
கநதுரித தந்திநோऽஸ்மாத் கடிகாத்ரிஹரே: கதம் ந பிப்யது மே ॥

ருஷ்டே ந யேந — சோபமடைந்த எப்பெருமானாலே, ருத்ர: — சிவபெருமான், சரப:அபி — சரபவுருக் கொண்ட போதிலும், ருக்ண: — தோற்றுப்போய், தரணீம் ஜகாம — பூமிக்குள்ளே புகுந்து கொண்டானோ, அஸ்மாத் கடிகாத்ரிஹரே: — அத்தகைய இந்த கடிகாசலச்சிங்கப் பெருமானிடமிருந்து, மே — என்னுடைய, கநதுரித தந்திந: — மஹாபாதகங்களாகிய யானைகள், கதம் — எப்படி, ந பிப்யது — அஞ்சமாட்டா.

இக்கடிகைமலைச்சிங்கம் சரபத்தையே அச்சுறுத்துவதாக இருக்க, இதனிடம் யானைகள் அஞ்சுவதைப் பற்றித் தனியே சொல்ல வேண்டுமா? என்றபடி.

சரபம் — இரண்டுதலைகளையும் சிறகுகளையும் கூரிய நகமுள்ள எட்டுக்கால்களையும் மேல் நோக்கிய கண்களையுமுடைய மிருகவிசேடம். இதனைப் பறவையென்றலுமுண்டு. இது சிங்கத்தை எளிதிற் கொல்லுந் திறமுடையது. வெறுஞ்சிங்கமன்றி நரசிங்கமாதலாலும், ஸாமாந்யஸிம்ஹமன்றி வரம்பிலாற்றலுடைய புருஷோத்தமனது அவதாரமான திவ்யஸிம்ஹமாதலாலும் இது சரபத்தைக் கொன்றிட்டது என்று மஹா வித்வான் வை.மு சடகோபராமாநுஜசார்ய ஸ்வாமி தமது நூற்றெட்டுத்திருப்பதியந்தாதி 97ம் பாட்டின் உரையில் குறித் திருப்பது இங்கு நோக்கத்தக்கது.

ஹை மர்த்யஸிம்ஹவபுஷஸ்தவ தேஜஸோऽம்ஶ ஶம்புர் பவந்ஹி ஶரப: ஶலபோ பபூவ சரபவுருக் கொண்ட சிவன் நரஸிம்ஹ ரூபங்கொண்ட உனது தேஜஸ்ஸில் ஒரு மூலையில் விட்டில் பூச்சி போலே அகப்பட்டு மாண்டானன்றோ? இது ஆச்சரியம் — என்று கூரத்தாழ்வான் (அதிமாநுஷ ஸ்தவம்— 12) அருளிச்செய்தது ஸேவிக்கத்தக்கது.

६९)अव्याहतप्रचारात् अपहतमन्त्रौषधात् सहस्रास्यात् ।
पातकमूषिकनिवहात् पायात् घटिकाद्रिभोगिनः को हि ॥

(69)அவ்யாஹதப்ரசாராத் அபஹதமந்த்ரௌஷதாத் ஸஹஸ்ராஸ்யாத் ।
பாதகமூஷிகநிவஹாத் பாயாத் கடிகாத்ரிபோகிந: கோ ஹி ॥

அவ்யாஹத ப்ரசாராத் — *தடையற்ற ஸஞ்சாரத்தை யுடையதும்,* அபஹதமந்த்ரௌஷதாத் — *தூரத்தில் துரத்தப் பட்ட மந்த்ரமென்ன மருந்தென்ன இவற்றையுடையதும் (மந்திரத்திற்கும் மருந்துக்கும் கட்டுப்படாததும்),* ஸஹஸ்ரஆஸ்யாத் — *ஆயிரவாய்களுடையதுமான,* கடிகாத்ரி போகிந: — *கடிகை மலையிலுள்ள போகமனுப விக்கும் எம்பெருமானாகிய ஸர்ப்பத்தைக் காட்டிலும்,* கோ ஹி — *வேறுயார்தான்,* பாதக முஷிகநிவஹாத் — *பாபமாகிய எலிக்கூட்டத்திலிருந்து,* பாயாத் — *(நம்மைக்) காப்பாற்றக்கடவர்.*

*இதில் எம்பெருமானை ஸர்ப்பமாக ரூபணம் செய்தார். ஆயிரமுகமுடைய எம்பெருமானாகிற ஸர்ப்பம் தான், நம்முடைய எண்ணற்ற பாதகமாகிய எலிகளை விழுங்கவல்லதென்றபடி. போகீ — பாம்பும், போகமனு விப்பவனும். மந்திரமும் மருந்தும் தானிட்டவழக்காகப் பெற்ற எம்பெருமானாகிற பாம்பு, மந்திர — மருந்து களுக்குக் கட்டுப்படாமல் தடையற்று பக்தர்களுள்ள விடந்தோறும் திரிந்து அவர்களுடைய பாதக மூஷிகங் களை விழுங்குமென்பது கருத்து.*

७०)कलितपुरुषार्थसार्थात् घटिकाघटितात् सनातनाद्धर्मात् ।
किं वा प्रमाद्यतां स्यात् क्षेमं ह्यत्र ह्यमुत्र वापुंसाम् ॥

(70) கலிதபுருஷார்த்தஸார்த்தாத் கடிகாகடிதாத் ஸநாதநாத் தர்மாத் ।
கிம்வா ப்ரமாத்யதாம் ஸ்யாத் க்ஷேமம் ஹ்யத்ர ஹ்யமுத்ர வாபும்ஸாம் ॥

கலிதபுருஷார்த்தஸார்த்தாத் — உண்டு பண்ணப்பட்ட புருஷார்த்த ஸமூஹத்தையுடைய உபாயமாயும், கடிகா கடிதாத் — கடிகைமலையில் (மஹிரிஷிகளால்) சேர்க்கப் பட்டதுமான, ஸநாதநாத் தர்மாத் — (நம்மால் முயன்று உண்டாக்கப்படுகின்ற கருமயோகாதி தருமங்கள் போலன்றிக்கே) நித்யஸித்தமான தருமமாகிய கடிகை யெம்பெருமானிடமிருந்து, ப்ரமாத்யதாம் — தவறின, பும்ஸாம் — புருஷர்களுக்கு, அத்ர அமுத்ர வா — இம்மையிலோ மறுமையிலோ, கிம்வாக்ஷேமம்ஸ்யாத் — எந்த நன்மை தான் உண்டாகும்?

புருஷார்த்தங்கள் — இம்மைமறுமைகளில் இன்பமும், கைவல்யமோக்ஷஸுகமும் பரமபதத்தில் பகவதநு பவஸுகமுமாம், தருமம் — ஸுகத்தைச் சாதித்துத் தரும் உபாயம். — முன் ச்லோகத்தில் ஸுகாநுபவத்திற்குத் தடையாகவுள்ள பாவங்களை நீக்குதலாகிய அநிஷ்ட பரிஹாரம் கூறினார். இதில் (இஷ்டமாகிய) ஸுகத்தைத் தருவதாகிய இஷ்டப்ராபணம் கூறினார். இவை யிரண்டுமன்றோ உபாயத்தின் காரியம் : ஹி ஹி — பாதபூரணம்.

७१)घनसमयनिर्व्यपेक्षात् मेघाद् घटिकाद्रिभर्तुरुद्भूता ।
क्षालयति कलुषमलिनं काचन करुणातरङ्गिणी भुवनम् ॥

(71) கநஸமயநிர்வ்யபேக்ஷாத் மேகாத் கடிகாத்ரிபர்த்துருத்பூதா ।
க்ஷாளயதி கலுஷமலிநம் காசந கருணாதரங்கிணீ புவநம் ॥

கநஸமய நிர்வ்யபேக்ஷாத் — கார்காலத்தை எதிர் பார்க்காத, கடிகாத்ரிபர்த்து: — கடிகைமலைத்தலைவன் என்கிற, மேகாத் — மேகத்தினிடமிருந்து, உத்பூதா — உண்டான, காசந — ஒப்பற்ற, கருணா தரங்கிணீ — கருணை

யாகிய ஆறானது, கலுஷமலிநம் — பாபத்தினால் அழுக்கடைந்த, புவநம் — உலகத்தை (உலகிலுள்ளோரை) க்ஷாளயதி — சுத்திசெய்கிறது.

இதில் எம்பெருமானை மேகமாகவும் அவனிடமிருந்து பெருகுகிற கருணையை நதியாகவும் வருணிக்கிறார். உலகில் வெளியழுக்கைக்கழுவித் தூய்மையாக்கும் ஆறானது கார்காலத்திலுண்டாகும் மேகத்தை எதிர்பார்க்கும். உள்ளழுக்காகிய பாபத்தைக் கழுவிச் சுத்தமாக்கும் கருணையென்னும் ஆறு, கார்காலத்தைய் எதிர்பாராமல் எப்போதும் பெருகும். எம்பெருமான் நித்யனாகையால் அவனது கருணையும் நித்யமாய்ப் பாபிகளுக்கு உபயோகப்படுகிறது. அதை நாம் உபயோகித்துக் கொள்ளவேணுமென்றபடி. தரங்கிணீ — அலைகளை உடைய ஆறு.

७२)सन्निहितशङ्खपद्मात् सर्वसखात् सकलपुण्यजनसेव्यात् ।
घटिकाद्रिराजराजात् का वा न स्यात् समाश्रितात् सम्पत् ॥

(72) ஸந்நிஹித சங்கபத்மாத் ஸர்வஸகாத் ஸகலபுண்யஜனஸேவ்யாத்।
கடிகாத்ரிராஜராஜாத் கா வா ந ஸ்யாத் ஸமாச்ரிதாத் ஸம்பத் ॥

ஸமாச்ரிதாத் — (நம்மால்) தஞ்சமடையப் பெற்றவனாய்க் கொண்டு, ஸந்நிஹித சங்கபத்மாத் — (1) தன்னருகில் இருத்தப் பெற்ற சங்கையும் தாமரைமலரையும் அல்லது பிராட்டியையும் உடையவனும் (2)தன்னிடமுள்ள சங்கநிதி பத்மநிதிகளையுடையவனும், ஸர்வஸகாத் — (1) எல்லோருக்கும் தோழனானவனும், (2) சிவபெருமானுக்குத் தோழனானவனும், ஸகல புண்யஜந ஸேவ்யாத் — (1) எல்லாப்புண்யசாலி ஜனங்களாலும்

ஸேவிக்கத்தக்கவனுமான, (2) எல்லா யக்ஷர்களாலும் ஸேவிக்கத்தக்கவனுமான, கடிகாத்ரி ராஜராஜாத் – கடிகை மலையிலுள்ள குபேரனிடமிருந்து, காவா ஸம்பத் – எந்தச் செல்வந்தான், நஸ்யாத் – உண்டாகாது.

இதில் எம்பெருமானைக் குபேரனாக வருணிக்கிறார். பிரசித்தனான குபேரன் – தநத: என்று பேர்பெற்றவனாய்ப் பணமென்னும் செல்வத்தை மட்டுமே அளிக்கவல்லவன். இக்கடிகைமலைக் குபேரனோவென்னில்–இப்பணமாகிய செல்வத்தோடு கூட ஆயுட்செல்வம் மக்கட்செல்வம் முதலிய இம்மைச் செல்வமும், சொர்க்கபோகமாகிய மறுமைச் செல்வமும் மோக்ஷபோகமாகிய அழியாச்செல்வமும் ஆகிய எல்லாவற்றையும் கொடுக்கு மாற்றல்படைத்தவனென்பார் – கா வா ஸம்பத் நஸ்யாத் – செல்வ மென்று பெயர் பெற்றவற்றில் எது தான் (இவனிடமிருந்து) உண்டாகாது என்றார்.

ஸந்நிஹிதௌ சங்க; பத்ம: ச, அல்லது ஸந்நிஹிதே சங்க: பத்மா ச யேந ஸ: – ஸந்நிஹித சங்கபத்ம: தஸ்மாத் என்று பஹுவ்ரீஹிஸமாஸம் கொள்க. ஸர்வஸ்ய ஸகா– ஸர்வஸக: – ஸர்வ:–என்பது எல்லாரும் என்ற பொருளையும், சிவனையும் குறிக்கும். எல்லோருக்கும் தோழன் எம்பெருமான், சிவனுக்குத் தோழன் குபேரன். குபேரஸ் த்ர்யம்பகஸக: என்பது அமரகோசம் – குபேரன் முக்கண்ணனுக்குத் தோழன் என்பது அதன் பொருள். புண்யஜந: – புண்யம்செய்தவனும், யக்ஷனும். ராஜராஜ : – யக்ஷராஜனாகிய குபேரன்.

७३)प्रजनविषानलमूर्च्छा विमुषितचित्तान् भवोरगग्रस्तान् ।
कुर्वीत लब्धसत्तान् को वा घटिकाद्रिगारुडिकतोऽन्यः ॥

*(73)* ப்ரஜநவிஷாநல மூர்ச்சாவிமுஷித சித்தாந் பவோரக க்ரஸ்தாந் ।
குர்வீத லப்தஸத்தாந் கோ வா கடிகாத்ரிகாருடிகதோऽந்ய: ॥

பவஉரகக்ரஸ்தாந் — *ஸம்ஸாரமென்னும் ஸர்ப்பத்தினால் விழுங்கப்பட்டவர்களாய்,* ப்ரஜந விஷாநல மூர்ச்சா விமுஷித சித்தாந் — *பெண்கலவியாகிற விஷக்காற்றின் வளர்ச்சியினால் கவரப்பட்ட மனத்தையுடையவர்களை,* கடிகாத்ரிகாருடிகத: —*கடிகைமலையிலுள்ள விஷவைத்தியனாகிய எம்பெருமானைத் தவிர,* அந்ய: கோ வா — *வேறுயார் தான்,* லப்தஸத்தாந் — *ப்ராணனையுடையவர்களாக — ஸத்தை பெற்றவர்களாக = ஸத்தையின் பயனான மோக்ஷத்தையடைந்தவர்களாக,* குர்வீத — *ஆக்கவல்லார்.*

*இதில் எம்பெருமானை விஷம்போக்கும் வைத்தியனாக வருணிக்கிறார். பாம்புதீண்டி விஷமேறிச் சாகக்கிடக்கிறவனை விஷவைத்தியன் பிழைக்க வைப்பான். இவ்வுலக வாழ்க்கையென்னும் அரவம் தீண்டி விஷய போகமாகிய விஷமேறித் தன் பிறப்பிற்குப் பயனாகிய மோக்ஷமென்னும் உயர்ந்த ஜீவனத்தை (பிராணனை)ப்பெறாமல் ஸத்தாநாசமடைய விருக்கும் மனிதனை, எம்பெருமானாகிய விஷவைத்தியன் மோக்ஷமளித்துப் பிராணனை உண்டுபண்ணுகிறான் என்றபடி. காருடிக: — விஷவைத்தியன்.*

७४)नित्यान्निरस्तदोषात् नियतपदात् पुण्यकीर्तनश्रवणात् ।
विनतोचिताभिधानात् ब्रह्मण एवाधिगम्यते सकलम् ॥

(74)நித்யாத் நிரஸ்ததோஷாத் நியதபதாத் புண்யகீர்த்தந ச்ரவணாத் ।
விநதோசிதாபிதாநாத் ப்ரஹ்மண ஏவாதிகம்யதே ஸகலம்॥

நித்யாத் – எக்காலத்திலும் அழியாமல் நிலை பெற்றிருப்பவனும், நியதபதாத் – நித்யமான பரமபத மென்னும் ஸ்தானத்தையுடையவனும், நிரஸ்த தோஷாத் – துரத்தப்பட்ட குற்றங்களையுடையவனும், புண்ய கீர்த்தன ச்ரவணாத் – புண்ணியத்தை உண்டாக்குகின்ற –தன்னைப் பற்றிய கீர்த்தனத்தையும் ச்ரவணத்தை முடையவனும் (= எவனைத் துதித்தாலும், பிறர்துதிக் கக்கேட்டாலும் அவை புண்ணியத்தை யுண்டாக்குமோ அப்படிப்பட்டவனும்) விநதோசித அபிதாநாத் (– தன்னை வணங்கிய பக்தர்களுக்குக் கருணை செய்யத்தக்கவன் என்று பொருள் படுகின்ற) பக்தோசிதன் என்ற திருநாம முடையவனுமான, ப்ரஹ்மண:ஏவ – ப்ரஹ்மமாகிய ஸ்ரீமந் நாராயணனிடமிருந்தே, ஸகலம் – விரும்பிய எல்லாப்பயனும், அதிகம்யதே – அடையப்படுகிறது.

கீழ் 72ம் ச்லோகத்தில் கடிகைமலைக் குபேரனிடத்தில் எல்லாச் செல்வங்களும் கிடைக்கு மென்றார். அவனை வெறும் குபேரனென்று நினைக்க வேண்டாம். அவன் பரப்ரஹ்ம மென்னும் ஸாக்ஷாத் விஷ்ணுவேயாவான். அவனிடமிருந்து எல்லாப் புருஷார்த்தங்களையும் பெறலாம் என்கிறார் இதனால். ஸகல பல ப்ரதோ ஹி விஷ்ணு: (விஷ்ணு எல்லாப் பலன்களையும் அளிக்கவல்லவரல்லவா) என்றாரிறே வேதவ்யாஸ பகவான் விஷ்ணு தர்மத்தில்(43–47). விநதசப்தமும் , பக்த சப்தமும் பரியாய மாகையால், பக்தோசிதன் என்பதை விரதோசிதன் என்றாரிதில்.

७५)शुद्धिमुपजनयतोऽग्र्यां स्वालोकेनैव चक्षुषो जगताम्।
घटिकाद्रिमित्रतोऽन्यं कलयेऽखिललोकबान्धवं नाहम् ॥

*(75)*சுத்திமுபஜநயதோऽக்ர்யாம் ஸ்வாலோகேநைவ சக்ஷுஷோ ஜகதாம்।
கடிகாத்ரி மித்ரதோऽந்யம் கலயேऽகிலலோகபாந்தவம் நாஹம் ॥

ஸ்வ ஆலோகேந ஏவ — *(1) தன்னுடைய ஒளியினாலேயே (2) தனது கடாக்ஷத்தாலேயே,* அக்ர்யாம் சுத்திம்— *உயர்ந்த தூய்மையை,* உபஜநயத: — *உண்டாக்குமவனும்,* ஜகதாம்சக்ஷுஷ: — *உலகங்களுக்குக் கண் போன்றவனுமான,* கடிகாத்ரிமித்ரத: — *கடிகை மலையிலிருக்கும் சூரியனைக் காட்டிலும்,* அந்யம் — *வேறொருவனை,* அஹம் — *நான்,* அகிலலோக பாந்தவம் — *எல்லாவுலகங்களுக்கும் பந்துவான சூரியனாக,* ந கலயே — *எண்ணமாட்டேன்.*

*இதில் எம்பெருமானைச் சூரியனாக ரூபணம் செய்கிறார். எம்பெருமானென்கிற சூரியனை விட—வேறான ஆகாயத்தில் தோன்றும் சூரியனை சூரியனாகக் கருதமாட்டேன் என்கிறாரிதனால். விசேஷணங்கள் இருவர்க்கும் பொருந்துவன. ஜகச்சக்ஷு: என்பது சூரியனுக்குப் பெயர். லோகபாந்தவ: என்பதும் அவனுக்குப் பெயர். எம்பெருமானும்* கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு *என்கிறபடியே உலகங் கட்குக் கண்ணானவன். சூரியன் கண்போல் வெளியறிவையும், எம்பெருமான் உள்ளுள்ள ஆத்மாவைப்பற்றிய அறிவையும் உண்டு பண்ணுவது ப்ரசித்தமிறே சூரியன் இருட்டைப் போக்கி உலகத்துக்கு உதவி செய்யும் பந்துவாகிறான்.* எம்பெருமான்

எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றம் (பெரிய திருமொழி 1–1–6) என்கிறபடி எல்லாவகையான பந்துவுமாகிறானிறே.

७६)अमृतप्रवाहसहजैरालोकैरमृतशीतलैः स्नपिताः ।
विविधान् भवदवदाहान् विजहति घटिकाद्रिविलसितस्य विधोः ॥

(76) அம்ருதப்ரவாஹஸஹஜை: ஆலோகைரம்ருதசீதளை: ஸ்நபிதா: ।
விவிதாந் பவதவ தாஹாந் விஜஹதி கடிகாத்ரிவிலஸிதஸ்ய விதோ: ॥

அம்ருதப்ரவாஹ ஸஹஜை: – அமுத வெள்ளத்தோடு ஸமானமானவைகளும், அம்ருதசீதளை: – அமுதம் போல் குளிர்ந்தவைகளுமான, – கடிகாத்ரி விலஸி தஸ்ய விதோ: ஆலோகை:–கடிகைமலையில் மிகவும் விளங்கு கிற சந்திரனுடைய நிலவினாலே – கடாக்ஷங்களாலே, ஸ்நபிதா: – நனைக்கப்பட்டவர்கள், விவிதாந் பவ தவ தாஹாந் – பலவகைப்பட்ட - ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயினால் உண்டான எரிச்சல்களை, விஜஹதி – விட்டுவிடுகிறார்கள்.

முன் ச்லோகத்தில் எம்பெருமானைச் சூரியனாக வருணித்தவர், இதில் சந்திரனாக வருணிக்கிறார். காட்டுத்தீயினால் உடம்புக்கு உண்டாகும் எரிச்சல் சந்திரனுடைய குளிர்ந்த நிலவு உடம்பின்மேல் பட்டால் நீங்கும். எம்பெருமானாகிற சந்திரனுடைய நிலவு – அதாவது குளிர்ந்த கடாக்ஷங்கள் நம் மேல் பட்டால் ஆத்மாவுக்கு ஏற்படும் ஸம்ஸாரதாபங்கள் நீங்கி விடுமென்றபடி. ஆத்யாத்மிகம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகம் என்று ஸம்ஸாரதாபங்கள் மூன்று. தவ:– காட்டுத்தீ.

७७)धर्मोत्तरं द्विपाद्रेः शङ्के घटिकाद्रिमत्पदविवादम् ।
केनापकारिणाऽस्मिन् कृष्णमृगवरस्य नियतसंवासः ॥

*(77)*தர்மோத்தரம் த்விபாத்ரே: சங்கே கடிகாத்ரி மத்பத விவாதம் ।
கேநாபகாரிணாऽஸ்மிந் க்ருஷ்ணம்ருகவரஸ்ய நியதஸம்வாஸ: ॥

த்விபாத்ரே: — *ஹஸ்திகிரிக்கு*, கடிகாத்ரி மத்பத விவாதம் — *கடிகைமலையென்கிற — நான் வசிக்கும் இடத்தோடு (உண்டான) வாய்ப்போரை — சண்டையை*, தர்மோத்தரம்—*உயர்ந்த தருமமுடையதாக (= மிகவும் நியாயமானதாக)* சங்கே — *ஊஹிக்கிறேன். (அச் சண்டை எப்படிப்பட்டதென்றால்)* கேந அபகாரிணா — *எந்த அபகாரியினால்*, அஸ்மிந் — *இங்கு (நானிருக்கும் இடத்தில்)* க்ருஷ்ண ம்ருகவரஸ்ய — *கிருஷ்ணனாய் அவதரித்த ம்ருகராஜனான ஸிம்ஹத்திற்கு*, நியத ஸம்வாஸ: — *என்னோடு கூட நித்யவாஸமானது*, கல்பித — *ஏற்படுத்தப் பட்டது? (என்பதேயாகும்.)*

*கடிகைமலை தன்னிடம் எழுந்தருளியுள்ள ஸிம்ஹத்தை ஹஸ்திகிரிக்கு அனுப்பி அதனை நித்யம் வஸிக்கும் படி செய்துவிட்டதனால், ஹஸ்தியான (= யானையான) தனக்கு ஆபத்து நேரிட்டதென்று நினைத்து, ஹஸ்திகிரி — கடிகைமலையோடு சண்டை போடுவதாக, இக்கவி தாம் கல்பித்து, அந்த சண்டை யைத் தாம் மிகவும் நியாயமாகக் கருதுவதாக வும் கூறுகிறாரிதுதன்னால். 'எந்தத் துரோஹி நானி ருக்குமிடத்தில் ஸிம்ஹத்தை ஸ்திர வாஸமாக இருக்கும்படிச் செய்திருப்பான். நீயே அப்படிச் செய்திருப்பாய்' என்பது ஹஸ்திகிரி கடிகைமலை யோடு புரிந்த வாய்ப்போரின் அனுவாதமாகும்.*

இத்தகைய சண்டையை மிகவும் நியாயமானதாகத் தாம் கருதுகிறராம் கவி. கடிகைமலைசெய்த காரியத்தினால் ஹஸ்திகிரிக்கு ஆபத்துவந்து விட்ட தனால் ஆபத்தையடைந்தவர்கள் ஆபத்துக்குக் காரணமாயிருப்பவர் மேல் கோபித்துச் சண்டை யிடுவது நியாயந்தானே என்பது இக்கவியின் கருத் தாகும். கடிகாத்ரிக்கு மத்பத (—என்னுடைய வாஸஸ் தானம்) என்று அடைமொழியிட்டதற்கு — கடிகை மலை எனது மலையாயிருந்தாலும் அது செய்த காரியத்தை நான் நியாயமுடையதாகக் கருத மாட்டேன், அது செய்த துரோஹத்திற்காக, ஹஸ்தி கிரி (வேறுமலை) அது தன்னோடு புரிந்த போரையே நான் நியாயம் மிக்கதாகக் கருதுவேன் — என்பது கருத்து.

இங்ஙனமன்றி, பூர்வார்த்தத்தின் இறுதியிலுள்ள மத்பதவிவாதம் என்பதை—மத்பதவிவாஸம் என்பதா கக் கொண்டும், கேநாபகாரிணா என்ற விடத்திற்கு — வேறொரு பிரதியில் 'கேநாபிகாருணா' என்றுள்ள பாடபேதத்தை ஏற்றுக் கொண்டும், சுவை மிக்க பொருளொன்றை ஸ்ரீ காஞ்சீ நிவாஸரஸிகராய் வட மொழிப்பெரும்புலவராகிய ப்ரதிவாதிபயங்கரம் நரஸிம்ஹாசார்யஸ்வாமி அருளிச்செய்தார். அது தன்னையும் இங்குக் குறிப்பிடுவது இன்றியமை யாததென்று நினைத்துக் குறிப்பிடுகிறேன். அவருக்கு அடியேனுடைய நன்றியும் வணக்கமும் உரித்தாகுக.

**த்விபாத்ரே:** — ஹஸ்திகிரியனுடைய, **க்ருஷ்ணம்ருக வரஸ்ய** — க்ருஷ்ணனாகிய ஸிம்ஹத்திற்கு, **அஸ்மிந்** — இந்த ஹஸ்திகிரியில், **நியதவாஸ:** — நித்யவாஸமானது,

காருணா — லோகசிற்பியான, கேந — நான்முகக் கடவுளினால், ஆபி — அடைவிக்கப்பட்டது. (அது தரும முடையதுதான்) த்விபாத்ரே: — அந்த ஹஸ்தி கிரியைவிட (ஹஸ்திகிரியில் அப்பெருமான் வாஸம் செய்வதைவிட) க்ருஷ்ணம்ருகவரஸ்ய — அந்த க்ருஷ்ண னாகிய ஸிம்ஹத்திற்கு (உண்டான), (1)கடிகாத்ரி மத்பத விவாஸம் — கடிகைமலையென்னும் நானிருக்கு மிடத்தில் விசேஷ வாஸத்தை, தர்மோத்தரம் — என்னுடைய உயர்ந்த தருமத்தின் (புண்யத்தின்) பயனாக, சங்கே — கருதுகிறேன். அல்லது — (2) கடிகாத்ரி — மத் — பத — விவாஸம் — கடிகைமலையையும் என்னையும் ஸ்தானமாகக் கொண்டு செய்த விசேஷ வாஸத்தை, தர்மோத்தரம் — 'ஆந்ருசம்ஸ்யம் பரோ தர்ம:' (ராமாயணம், ஸுந்தர.காண்டம் 38.41) கருணையே உயர்ந்த தருமம் — என்கிறபடியே அப்பெருமா னுடைய உயர்ந்த கருணையின் பயனாகவே, சங்கே — கருதுகிறேன், என்றும் கொள்ளலாம் என்பது அவர் பணித்த பொருள்.

७८)अमृतार्पणं श्रितानाम् अभिदुररसनत्वमार्जवं गमने ।
कथमिव च गरुडसख्यं घटिकाचलकृष्णभोगिनो घटते ॥

(78) அம்ருதார்ப்பணம் ச்ரிதாநாம் அபிதுரரஸநத்வ மார்ஜவம் கமநே ।
கதமிவ ச கருடஸக்யம் கடிகாசல க்ருஷ்ணபோகிநோ கடதே ॥

கடிகாசல க்ருஷ்ண போகிந: — கடிகைமலையில் உள்ள க்ருஷ்ணஸர்ப்பத்திற்கு, ச்ரிதாநாம் அம்ருதார்ப் பணம் — தன்னைக்கிட்டியவர்க்கு அம்ருதத்தைக் கொடுப்பதும் அபிதுர ரஸநத்வம் — பிளவுபடாத நாக்குடைமையும், கமநே — செல்லும்போது, ஆர்ஜவம்

— நேர்மையும், கருடஸக்யம் ச — கருடனோடு தோழமை யும், கதமிவ கடதே — எப்படித்தான் பொருந்துகிறது.

இதில் வேடிக்கையாக — எம்பெருமானைக் கருநாகமாகக் கூறி, அதற்கு விஷங்கொடுப்பதும், பிளவு பட்டநாக்குடைமையும், செல்லும்போது வளைந்து வளைந்து கோணலாய்ச் செல்லுவதும், கருடனோடு பகைமையுமே இயற்கையாகையால், அதனோடு முரண்பட்ட (பதவுரையில் கூறிய) தன்மை கள் எங்ஙனம் பொருந்துமென்று விரோதத்தைத் தோன்ற வைத்தார். க்ருஷ்ண போகீ — கருநாகமே.

அவ்விரோதத்திற்குப் பரிஹாரம் வருமாறு க்ருஷ்ணபோகீ என்றால் கருநாகமன்று, க்ருஷ்ண போகீ — க்ருஷ்ணனாய் அவதரித்துப் பல போகங் களை அனுபவித்த எம்பெருமானாகிய நரஸிம்மப் பெருமாள். அவனுக்கு —ஆச்ரிதர் பொருட்டுக் கடல் கடைந்து அம்ருதம் கொடுப்பதும், முன்னுக்குப்பின் முரணாகப் பேசுகையாகிற பிளவுபட்ட நாக்கில்லா மையும், தனது நடத்தையில் கோணலில்லாமையும், கருடனோடு தோழமையும் பொருந்தாமையில்லை, மிகவும் அவைபொருந்துமென்று விரோதத்திற்குப் பரிஹாரம் காண்க.

७९)आगस्सु संश्रितानामनभिज्ञस्यात्मनोऽमृतस्याहम् ।
नियमेन सेवकः स्यां नित्यं घटिकाद्रिभूमिपालस्य ॥

(79)ஆகஸ்ஸு ஸம்ச்ரிதாநாம் அநபிஜ்ஞஸ்யாத்மநோऽம்ருதஸ்யாஹம் ।
நியமேந ஸேவக: ஸ்யாம் நித்யம் கடிகாத்ரிபூமிபாலஸ்ய ॥

ஸம்ச்ரிதாநாம் ஆகஸ்ஸு — தன்னையடைந்த பக்தர்களின் குற்றங்களின் திறத்தில், அநபிஜ்ஞஸ்ய — அறியாமையையுடையவனும், அம்ருதஸ்ய ஆத்மந: — மரணம் முதலிய விகாரங்கள் இல்லாத பரமாத்மாவு மான, கடிகாத்ரி பூமிபாலஸ்ய — கடிகை மலையரச னான நரஸிம்ஹப் பெருமானுக்கு, அஹம் — அடியேன், நித்யம் — எப்பொழுதும், நியமேந — எல்லா நிலைகளிலும் தவறாமல், ஸேவக: ஸ்யாம் — தொண்டு செய்பவனாக ஆகக்கடவேன்.

எம்பெருமான் அடியார்கள் செய்த குற்றங் களைக் காணாக் கண்ணிட்டிருப்பவன். 'அவிஜ் ஞாதா' (விஷ்ணு ஸஹஸ்ர நாமம் 483) என்பது காண்க. 'ஏஷ தே ஆத்மா அந்தர்யாமீ அம்ருத:' (ப்ருஹ தாரண்யகம் 5—7—22) என்று, அந்தர்யாமியான எம்பெருமானை அம்ருத: ஆத்மா என்பதும் நோக்கத் தக்கது. இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு 'ஒழிவில் கால மெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமை' செய்யக் கடவேனென்றாராயிற்று இதனால்.

௮௦)सत्त्वोत्तरस्वदानं सद्भ्यो घटिकाद्रिभूभृतो युक्तम् ।
सुतरां पापरतानां युज्येतकथं सुरद्विषां दानम् ॥

(80)ஸத்த்வோத்தரஸ்வதாநம் ஸத்ப்யோ கடிகாத்ரிபூப்ருதோ யுக்தம் ।
ஸுதராம் பாபரதாநாம் யுஜ்யேத கதம் ஸுரத்விஷாம் தானம் ॥

கடிகாத்ரி பூப்ருத: — கடிகைமலையரசனான எம் பெருமானுக்கு, ஸத்ப்ய: — ஸத்தவகுணமுள்ள புண்ய சாலிகளான நல்லோர்களுக்காக, ஸத்த்வோத்தர ஸ்வதாநம் — ஸத்துவகுணம் அதிகமாகப் பெற்ற தன்னை அனுபவிக்கும்படி கொடுப்பதென்பது,

ஸுதராம் யுக்தம் – மிகவும் தகுந்த செயலாகும். பாபரதாநாம் ஸுர த்விஷாம் – பாபம் செய்வதிலேயே பற்றுடைய அஸுரர்கள் பொருட்டு, தாநம் –தன்னைக் கொடுப்பதென்பது, கதம் யுஜ்யேத – எப்படிப் பொருந்தும்.

ஸத்துவகுணமடைவர்களுக்கு ஸத்துவ குண முடைய தன்னைக் கொடுப்பது தகுந்தது. ரஜோ குணமும் தமோ குணமுமுடைய அசுரர்களுக்குத் தன்னைத் தருவது பொருந்தாது. ஆகையால்தான் எம்பெருமான் அவர்களுக்குத் தன்னை யனுபவிக்கத் தருவதில்லை என்றபடி.

८१)घटिकाद्रिकामसुरभेः काङ्क्षापदसकलफलमहो जगताम् ।
मातुर्गवां मयि स्यात् वत्से बहुलं कथं न वात्सल्यम् ॥

(81)கடிகாத்ரிகாமஸுரபே: காங்க்ஷாபதஸகலபலமஹோ ஜகதாம்।
மாதுர்கவாம் மயி ஸ்யாத் வத்ஸே பஹுளம் கதம் ந வாத்ஸல்யம்॥

கவாம் மாது: – பசுக்களுக்குத்தாயாரான, கடிகாத்ரி காமஸுரபே:– கடிகைமலையிலுள்ள எம்பெருமானா கிற காமதேனுவினிடமிருந்து, ஜகதாம் – உலகிலுள்ள வர்களுடைய, காங்க்ஷாபத ஸகல பலம் – விருப்பத்திற்கு இலக்கான எல்லாப்பலன்களும், மயி – என்னொரு வனிடத்தில், ஸ்யாத்– உண்டாகும். அஹோ – ஆச்சரியம். வத்ஸே – தன்கன்றினிடத்தில் மாது: – தாய்ப்பசுவுக்கு, வாத்ஸல்யம் – மிக்கஅன்பு, கதம் ந ஸ்யாத் – ஏன் இராது?

காமதேனு அவரவர்கள் ஆசைப்பட்டுக் கேட்டவற்றை மட்டும் அவரவர்களுக்குக் கொடுக்கும்.

தன்கன்றுக்கோ வெனில் கேட்காமலேயே எல்லா வற்றையும் கொடுக்கும். பிறரைவிடக் காம தேனு வுக்குத் தன்கன்றினிடம் மிக்க வாத்ஸல்யம் இருப்பது இயற்கையன்றோ என்றபடி. இதனால் முன் ச்லோகத்தில் கூறியபடியே தன்கன்று போன்ற அடியேனுக்குத் தன்னையும் கொடுக்கும்படியான வாத்ஸல்ய மிகுதி கூறியபடியும் ஆகும்.

८२)हन्त न जहत्यमोघामाशिषमाप्य श्रियं प्रयुञ्जनाः ।
घटिकाचलहरिचन्दनपार्श्वमहीनाः सुपावनाहाराः ॥

(82)ஹந்த ந ஜஹத்யமோகாமாசிஷமாப்ய ச்ரியம் ப்ரயுஞ்ஜாநா: ।
கடிகாசலஹரிசந்தந பார்ச்வமஹீநா: ஸுபாவநாஹாரா: ॥

அஹீநா: — ஸர்ப்பச்ரேஷ்டங்கள், ஸுபாவந ஆஹாரா: — நல்ல காற்றை ஆஹாரமாக உடையவை களாய், அமோகாம் ஆசிஷம் ஆப்ய — வ்யர்த்தமாகாத விஷப் பற்களையுடையவைகளாய், ச்ரியம் ப்ரயுஞ்ஜாநா: — விஷத்தைக் கக்குகின்றவைகளாய், கடிகாசல ஹரி சந்தனபார்ச்வம் — கடிகைமலையிலுள்ள எம்பெரு மானாகிற, சந்தன மரத்தின் ஸமீபத்தை, ந ஜஹதி — விட்டுப்போகிற தில்லை. ஹந்த — கஷ்டம்.

இப்பொருளின்படி கடிகைமலையிலுள்ள எம் பெருமானாகிற சந்தனமரத்தைவிட்டு அகலாமல் விஷப்பாம்புகள் இருப்பதனால் அவற்றுக்கு அஞ்சி எம்பெருமானை நாம் அணுகி வணங்க முடியா மலிருக்கிறது, ஐயோ கஷ்டம்— என்ற கருத்துத் தோன்றும். இதற்குப் பரிஹாரம் மேலே காண்க.

**அஹீநா:** — மிகவும் உயர்ந்த மஹர்ஷிகள், **ஸுபா வந ஆஹாரா:** — நல்ல காற்றையே

ஆஹாரமாகவுடையவர்களாய்த்(தவஞ்செய்து), **அமோகாம் ஆசிஷம் ஆப்ய** – வ்யர்த்தமாகாத தமது விருப்பத்தையுடையவர்களாய் (–தமது விருப்பம் நிறை வேறப்பெற்றவர்களாய்) ச்ரியம் **ப்ரயுஞ்ஜாநா**: –தம்மையண்டினவர்களுக்குச் செல்வத்தை அளிப்பவர்களாய்க் கொண்டு, **கடிகாசல ஹரி சந்தன பார்ச்வம் ந விஜஹதி**–கடிகை மலையிலுள்ள எம்பெருமானாகிற ஹரி சந்தன (கற்பக) வ்ருக்ஷத்தின் பக்கத்தை விடாமலிருக்கிறார்கள். **ஹந்த**–ஆச்சரியம்.

இப்பொருளின்படி மகரிஷிகள் தவஞ்செய்து எம்பெருமானிடம் தாம் விரும்பிய வரங்களைப் பெற்று, அதனால் எம்பெருமானையும் தம்மையும் அணுகினவர்களுக்கு வேண்டிய செல்வத்தை யளித்துக்கொண்டு பகவானை விடாமலிருக்கிறார்கள். எல்லோரும் எம்பெருமானையும் அவனடியார்களான அம்மகிரிஷி களையும் ஸேவிக்கக் கடிகைமலைக்குச் செல்லலாம் என்று முன் கூறிய விரோதத்திற்குப் பரிஹாரம் காண்க.

**ஆசீ** : – (1) விஷப்பல் (2) விருப்பம். **ஸ்ரீ**: (1) விஷம் (2) செல்வம் (1) **அஹீநாம் இநா: - அஹீநா:** – ஸர்ப்பங் களின் ச்ரேஷ்டங்கள். (2) நஹீநா: – அஹீநா: – நீசர்களுக்கு முரண்பட்ட உத்க்ருஷ்டர்கள். **பவநஏவ பாவந:**–சோபந: பாவந:–ஸுபாவந: ஸுபாவந:ஆஹார: யேஷாம் தே – ஸுபாவநாஹாரா:

८३)सदमृतफलस्य घटिकाशैलरसालस्य सविधगस्यापि ।
शब्दादिनिम्बसेवां सन्त्यजति न हन्त हृदयकाको मे ॥

**(83) ஸதம்ருதபலஸ்ய கடிகாசைலரஸாலஸ்ய ஸவிதகஸ்யாபி ।
சப்தாதி நிம்பஸேவாம் ஸந்த்யஜதி ந ஹந்த ஹ்ருதயகாகோ மே ॥**

ஸத்அம்ருதபலஸ்ய – நல்ல அம்ருதம்போல் தித்திக்கும் மோக்ஷமாகிய பழத்தையுடைய, கடிகாசைல ரஸாலஸ்ய – கடிகைமலையிலுள்ள எம்பெருமானாகிற ஒட்டுமாமரமானது, ஸவிதகஸ்ய அபி – என்பக்கத்தை அடைந்திருக்கச் செய்தேயும் அதனைவிட்டுவிட்டு, மே – என்னுடைய, ஹ்ருதய காக: – மனமாகிய காக்கை யானது, சப்தாதி நிம்ப ஸேவாம் – சப்தாதி விஷயங் களாகிற வேப்பம் பழத்தை உண்ணுதலை, ந ஸந்த்யஜதி – விடுவதேயில்லை. ஹந்த – கஷ்டம்.

இதில் கடிகையெம்பெருமானை ஒட்டுமாமர மாகவும் அவன் கொடுக்கும் அம்ருதத்தை – மோக்ஷத்தை அதில் பழுத்த பழமாகவும் ரூபணம் செய்து, அம்மரம் கடிகைமலையில் எனக்கு அண்மையில் இருக்கச் செய்தேயும் அதைவிட்டு விட்டு, என் மனமாகிய காக்கை தான் உண்டு பழகிய வேப்பம் பழமாகிய சப்தாதிவிஷயத்தையே அனுபவிக்க எண்ணி, வெகு தூரம் வருந்திச் செல்கிறது. ஐயோ கஷ்டம் என்று கவி தம்மைப்பற்றி நைச்யாநுஸந்தானம் செய்கிறார். இதனால் அவருடைய நைச்யாநுஸந்தானம் நமக்குப் பாடம் கற்பிக்கிறது – நீச விஷயாநுபவத்தைவிட்டு மோக்ஷமாகிய பலம் கிடைக்க, கடிகைமலை எம்பெரு மானைச் சேவிக்கச் செல்லுங்கள் என்பதாக.

८४)अमलानुरागसलिलैः अभिलाषमलान्यपोह्य सकलानि ।
कुसुमैरहिंसनाद्यैः कुर्यां घटिकाद्रि दैवतस्यार्चाम् ॥

(84)அமலாநுராகஸலிலை: அபிலாஷமலாந்யபோஹ்ய ஸகலாநி ।
குஸுமைரஹிம்ஸநாத்யை: குர்யாம் கடிகாத்ரிதைவதஸ்யார்ச்சாம் ॥

அமலஅநுராகஸலிலை: – நிர்மலமான, அன் பென்கிற (பகவத்பக்தியென்கிற) தீர்த்தத்தினாலே,

**அபிலாஷ** மலாநி ஸகலாநி — நீசமான சப்தாதி **விஷய**ங்களில் ஆசையாகிற அழுக்குக்கள் அனைத்**தையும், அபோஹ்ய** — என் மனத்திலிருந்து அகற்றி, **அஹிம்ஸாத்யை:புஷ்பை:** — அஹிம்ஸை முதலிய எட்டுப் புஷ்பங்களாலே, **கடிகாத்ரி தைவதஸ்ய** — கடிகை மலைத் தேவதையாகிய நரஸிம்ஹப் பெரு மானுக்கு, **அர்ச்சாம்** — பூஜையை, **குர்யாம்** — செய்யக் கடவேன்.

பகவானைப் பற்றிய நிர்மலமான பக்தி யுண்டானால் நீச விஷயங்களில் ஆசை அகன்று விடும். அவை அகன்றால் மனத்தில் எட்டுவகையான எண்ணங்கள் பிறக்கும் அவற்றால் எம்பெருமானுக்கு ஸந்தோஷ முண்டாகும்படி அவனுக்குப் பூஜை செய்கிறேனென்கிறார். முன் ச்லோகத்தில் கூறிய மோக்ஷத்திற்கு எம்பெருமானிடம் பக்தியுண்டாக வேணும். அதனால் கெட்ட ஆசைகள் அகலும். நல்லெண்ணங்கள் உண்டாகும். அவை பகவானுக்கு உகப்பையுண்டு பண்ணுவன என்பது கருத்து.

பகவானை அர்ச்சிக்கும் புஷ்பங்கள் எட்டு, வெளிப் புஷ்பங்கள் 'ஆனிரைமேய்க்க நீ போதி' என்று தொடங்கும் திருமொழியில் பெரியாழ்வார் அருளுகின்ற செண்பகம், மல்லிகை, பாதிரி, செங்கழுநீர், புன்னைப்பூ, குருக்கத்தி, இருவாட்சி, கருமுகை — என்பவை எட்டு. உள்ளத்தில் உண்டாகும் புஷ்பங்களாவன — அஹிம்ஸை, பொறியடக்கம், தயை, பொறுமை, தத்துவஜ்ஞானம், தவம், த்யானம், ஸத்யம் என்பவை. இவையெட்டும் விஷ்ணுவுக்கு ப்ரீதியை உண்டாக்குவனவாம்.

८५)धनदाद्यैरपि न परैस्साध्यं सुमहद्धिरण्यदानं तत् ।
सुकरेण कृतमतःस्यात् तुल्यो घटिकाद्रिभूभृतः को वा ॥

(85)தனதாத்யைரபி ந பரைஸ் ஸாத்யம் ஸுமஹத் ஹிரண்ய தாநம் தத் ।
ஸுகரேண க்ருதமத: ஸ்யாத் துல்யோ கடிகாத்ரிபூப்ருத: கோ வா ॥

(கடிகைமலையரசனான எம்பெருமானால்) பரை:— பிறராகிய, தநத ஆத்யைரபி — குபேரன் முதலியவர் களாலும், யத் ந ஸாத்யம் — எது ஸாதிக்க முடியாததோ, தத் — அத்தகைய, ஸுமஹத் — மிகப் பெரியதான, ஹிரண்ய தாநம் — (1) ஸ்வர்ணதான மானது (ஹிரண்யனைப் பிளத்தலானது) ஸுகரேண — நல்ல கையினால், க்ருதம் — செய்யப்பட்டது. அத: — அக்காரணத்தினால், கடிகாத்ரி பூப்ருத: — கடிகை மலையரசனுக்கு, **கோவாதுல்ய:ஸ்யாத்** — எவன் தான் ஸமாநமாக ஆக முடியும்?

தாநம் = கொடுத்தலும் பிளத்தலும்.

८६)जनयत्यवति च सकलान् ज्ञापयति च योहिताहिते शास्त्रात्।
नाध्येति तस्य को वा ज्ञानी घटिकाद्रिसर्वजनकस्य ॥

(86)ஜநயத்யவதி ச ஸகலாந் ஜ்ஞாபயதி ச யோ ஹிதாஹிதே சாஸ்த்ராத் ।
நாத்யேதி தஸ்ய கோ வா ஜ்ஞாநீ கடிகாத்ரிஸர்வஜநகஸ்ய ॥

ய: — எவன், ஸகலாந் — எல்லோரையும், ஜநயதி அவதிச — பிறப்பிக்கிறானோ, மேலும் காப்பாற்று கிறானோ, சாஸ்த்ராத் — வேதாதிசாஸ்த்ரங்களின் வாயிலாக, ஹிதஅஹிதே — நன்மையையும் தீமையையும், ஜ்ஞாபயதி ச — அறிவிக்கின்றானோ, தஸ்ய — அந்த, கடிகாத்ரி ஸர்வஜநகஸ்ய — கடிகை மலையிலுள்ள எல்லோர்க்கும்

தந்தையான எம்பெருமானை, கோ வா ஜ்ஞாநீ — எந்த அறிவாளிதான், ந அத்யேதி — கற்றறிய மாட்டான்.

இத்தனையுபகாரங்களைச் செய்த எம்பெருமானை எல்லோரும் வேதாதி சாஸ்த்ரங்களின் மூலமாகக் கற்றறிவார்கள் என்றபடி. அத்யேதி தஸ்ய கோ வா என்று பாடமானால் அவன் சொல்லை யார்மீறுவார் கள் என்று பொருள் கொள்க. பித்ரு வாக்யபரி பாலனம் பிள்ளைகளுக்குப்பணியன்றோ? பித்ரு வாக்யமானது ச்ருதி ஸ்ம்ருதீ மமைவாஜ்ஞா (விஷ்ணு தர்மம் 76—31) என்கிறபடியே பகவதாஜ்ஞாரூபமான ச்ருதிகளும் ஸ்ம்ருதிகளுமாகும்.

८७)दोषाकरे विरागं सूर्यालोके विकासमामोदम् ।
पद्माख्यामपि वहतो युक्ता घटिकाद्रिपस्य केसरिता ॥

(87) தோஷாகரே விராகம் ஸூர்யாலோகே விகாஸமாமோதம் ।
பத்மாக்யாமபி வஹதோ யுக்தா கடிகாத்ரிபஸ்ய கேஸரிதா ॥

தோஷாகரே — (1) இரவை விளங்கச்செய்யும் சந்திரனிடத்தில் (2) குற்றங்களுக்கு நிதியான மனித னிடத்தில், விராகம் — ஆசையில்லாமையையும் (வெறுப் பையும்), ஸூர்ய ஆலோகே (1) ஸூர்யனைப் பார்க்கும் போது, ஸூரி ஆலோகே (2) தத்வஜ்ஞானியான பண்டி தனைக் காணும் போது, விகாஸம் ஆமோதம் — (1) மலர்ச்சியையும் நறுமணத்தையும், (2) முகம்மலர் தலையும் ஸந்தோஷத்தையும், பத்ம ஆக்யாம் அபி (1)(2) பத்ம: என்கிற பெயரையும், வஹத: — வகிக்கிற, கடிகாத்ரிபஸ்ய — கடிகைமலையரசனுக்கு, கேஸரிதா— (1) பூந்துகளையுடைமை(2)பிடரிமயிருடைமை, யுக்தா — பொருந்தியதேயாகும்.

இதில் எம்பெருமானை — பூந்துகளையுடைய தாமரை மலராந்தன்மையையும், பிடரிமயிருடைய ஸிம்ஹமாம் தன்மையையும், அவையிரண்டு தன்மை களுக்கும் ஏற்கும் விசேஷணங்களை சிலேடை வகையில் அமைத்துச் சமத்காரமாகப்பேசுகிறார். இரண்டு தன்மை களையும் பதவுரையில் காட்டியபடி பிரித்துக்காண்க.

**தோஷாம் கரோதி** — இரவை அலங்கரிப் பதனால் சந்திரனுக்கும், **தோஷாணாம் ஆகர:** — குற்றங்களுக்கு இருப்பிடமாகையால் துஷ்டனுக்கும் தோஷாகரனாந் தன்மை ஒக்கும். பத்ம: என்பது தாமரைமலருக்கும், பத்ம: அஸ்மிந் அஸ்தி, பத்மா அஸ்மிந் அஸ்தி என்ற வ்யுத்பத்திகளால் — தாமரை மலரைக்கையிலுடைமையாலும், தாமரையாளான பிராட்டியைத் திருமார்பில் உடைமையாலும் பெருமா ளுக்கும் பெயராகும். மற்றவை ஸ்பஷ்டம்,

८८)तन्वी मयाऽद्य लब्धा तपसा विपुलेन भक्तिकन्येयम् ।
भजतामव्यभिचारं भावं घटिकाद्रिभर्तरि प्रौढा ॥

*(88)* தந்வீ மயாத்ய லப்தா தபஸா விபுலேந பக்திகந்யேயம் ।
பஜதாமவ்யபிசாரம் பாவம் கடிகாத்ரிபர்த்தரி ப்ரௌடா ॥

மயா — என்னாலே, விபுலேந தபஸா — பெரிய தபஸ்ஸின் மூலமாக, அத்ய லப்தா— இப்போது அடையப்பட்ட, இயம் — இந்த, தந்வீ— சிறிய அளவுள்ள (2) மெல்லிய மேனியை உடைய, பக்தி கந்யா — (1) பக்தியாகிற (2) கன்னி கையானவள், ப்ரௌடா ஸதீ — (1) பரிபக்குவமடைந்ததாய் (2) ருதுவானவளாய்க்

கொண்டு, கடிகாத்ரி பர்த்தரி — (1) கடிகை மலையரசனான, (2) கணவனிடத்தில், அவ்யபிசாரம் பாவம் — (1) வேறொரு தேவதையிடம் பிளவுபடாத தன்மையை (2) வேறொரு புருஷனிடத்தில் செல்லாத மனதை, பஜதாம் — அடைந்திடுக.

இதில் எம்பெருமானிடம் பக்தியானது தமக்கு நீண்ட காலம் தவம் செய்து உண்டானதாகவும், அது நாளடைவில் வளர்ந்து பெருகி எம்பெருமானைவிட்டு மற்றோர் வ்யக்தியில் அகலாதிருக்க வேணுமென்ப தாகவும் பேசுகிறார். இந்த பக்தியின் நிலைமைக் கேற்ப, ஒரு பெண் ணின் பருவத்தையும் குறித்திருப்பது அனுபவிக்கத்தக்கது. இப்படிபட்ட பக்திக்கு ப்ரயோஜ நம் மோக்ஷமடையத் தகுதி பெறுதலாகும். மாஞ் ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே, ஸ குணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே (கீதை 14—26) (என்னையாவனொருவன்அவ்யபிசரித மான — பிறரிடத்தில் பிளவுபட்டுச் செல்லாத பக்தி யோகத்தினால் ஸேவிக்கிறானோ, அவன் முற்கூறிய ஸத்த்வ ரஜஸ் தமோ குணங்களைக்கடந்து, ப்ரஹ்ம ஸாம்யமாகிற மோக்ஷத்தையடைவதற்குத் தகுதி பெறுகிறான்)என்று கண்ணபிரான், அருளியது காண்க. அல்லது உணவுக்கு அவச்யம் முன்பு வேண்டிய பசி போலே, எம்பெருமானை அனுபவிக் கைக்கும் அவனுக்குத் தொண்டுசெய்வதற்கும் முன்பு உண்டாக வேண்டிய ஸ்வயம்ப்ரயோஜனமாகிய பக்தியை இங்குச் சொல்லிற்றாகவும் கொள்ளலாம்.

८९)भास्वति सुरासुरगुरौ भोगिनि वन्दारुसौम्यमन्दारे ।
घटितात्मकाय!घटते घटिकाद्रिविधौ कथं ग्रहैः पीडा ॥

௮௯ பாஸ்வதி ஸுராஸுரகுரௌ போகிநி வந்தாரு ஸௌம்ய மந்தாரே।
கடிதாத்மகாய ! கடதே கடிகாத்ரிவிதௌ கதம் க்ரஹை: பீடா ॥

ஹே கடித ஆத்மகாய — வாராய்! பொருந்தாத — ஸிஹ்மத்தின் தலையையும் மனிதனின் உடலையும் பொருத்தித் தனது திருமேனியாகக் கொண்ட எம் பெருமானே, பாஸ்வதி — விளங்குமவனும், ஸுர அஸுர குரௌ — தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பூஜிக்கத் தக்கவனும், போகிநி — போகங்களை அனுபவிக்கின்ற வனும், வந்தாரு ஸௌம்ய மந்தாரே — துதிப்பவர்க்கு நல்ல கற்பகம் போல் எல்லாவற்றையும் அளிப்பவனும் ஆகிய, கடிகாத்ரி விதௌ — கடிகை மலையிலுள்ள எம்பெருமானாகிய சந்திரனாகிய, த்வயி — உன்னிடத் தில், க்ரஹை: பீடா — க்ரஹங்களால் உண்டாகும் துக்கமானது, கதம் — எப்படி, கடதே — பொருந்தும்.

இதில் எம்பெருமானைச் சந்திரனாகக் குறிப்பிட்டு, சந்திரனுக்கு இயல்பாக உண்டாகும் க்ரஹபீடைகள் உண்டாகாதென்கிறார் — உண்டாகா மைக்குக் காரணம்—அவன் வெறும் சாதாரண சந்திரன் அல்லாமல் பற்பல பெருமைகளைப் பெற்ற சந்திரன் ஆகையாலே ஆகும். அப்பெருமைகளே — பாஸ்வதி முதலிய விசேஷணங்களினால் சொல்லப்பட்டனவாகும்.

மேலும் இந்த சந்திரன் எல்லா க்ரஹங்களாகவும் உள்ளமையால் — க்ரஹங்களால் உண்டாகும் துக்கம் இவனுக்கு உண்டாகாதென்கிறார். எல்லா க்ரஹங் களுக்கும் இவ்வெம்பெருமான் அந்தர்யாமியாகை

யால் எல்லா க்ரஹங்களாகவும் இவனே யாகைக்குத் தட்டில்லை யாகையால், க்ரஹபீடை இவனுக்கு உண்டாகைக்கு இடமேயில்லை. தன்னால் தனக்குப் பீடை உண்டோ?

(1) பாஸ்வாந் – சூரியன் (2) ஸுரஅஸுரகுரு (1) ஸுரகுருவான ப்ருஹஸ்பதி (3) அஸுரகுருவான சுக்ரன் (4) ஸௌம்யன் – புதன் (5) விது: – சந்திரன், போகீ – பாம்பு (6) பாம்புத்தலையுடைய கேது, (7) பாம்புஉடலையுடைய ராகு. அங்காரகனும் சனியு மாகிய மற்றுமுள்ள இரண்டு க்ரஹங்களையும் உப லக்ஷணவகையால் கூட்டிக் கொள்க. ஆக இந்த க்ரஹங்களுக்குகெல்லாம் அந்தர்யாமியாகை காரணமாக இந்த கிரஹங்களெல்லாம் இவனுக்குச் சரீரமாகையால், இவ்வெம்பெருமானாகிற சந்திர னுக்கு இவனிட்ட வழக்காக இருக்கும் க்ரஹங்களால் உண்டாகும் பீடை இல்லையென்றாராயிற்று.

கடிதாத்மகாய: – கடிதௌ – ஆத்மகாயௌ யேந ஸ:– கடிதாத்மகாய: என்று விக்ரஹம். காய சப்தம் சரீரத்தைக் குறிப்பதாய்–இங்கு சரீரா வயவங் களாகிய தலையையும் மற்றுள்ள கீழுடலையும் குறிப்பிடுகின்றது. பொருந்தாத – சிங்கத்தின் தலை யையும் மனிதனது உடலையும் நன்றாகப் பொருத்திக் கொண்டானாம் எம்பெருமான். ஸிதாக்ஷீரந்யா யேந ஸங்கமிதாங்ககம் ......ரங்கேந்த்ர ஸிம்ஹ முபாஸ் மஹே (ஸ்ரீரங்க உத்தர – 64) சர்க்கரையையும் பாலையும் சேர்க்கிற கணக்கிலே–ஸிம்ஹத்தின் தலை மனிதனின் உடல் ஆகிய இரு திருவுருவங்களைச் (பரம போக்ய

மாக) சேர்த்துக் கொண்ட ஸ்ரீரங்கநாதனாகிய நரஸிம்மப் பெருமாளைச் சிந்திக்கிறோம்—என்று அருளிச் செய்தாரிறே ஸ்ரீபராசரபட்டர். பட்டர் ஸங்கமிதாங்கக: என்றதனையே இவர் இங்கு கடிதாத்மகாய: என்ற சொல்லால் குறிப்பிட்டருளினரென்று கருதத்தக்கது.

१०)समवर्तिनि भुवनेशे पुण्यजने पावके जगत्प्राणे ।
श्रीदे शिवेऽपि घटिकाशैलहरौ सति किमन्यदिक्पालैः॥

*(90)* ஸமவர்த்திநி புவநேசே புண்யஜநே பாவகே ஜகத்ப்ராணே ।
ஸ்ரீதே சிவே(அ)பி கடிகாசைல ஹரௌ ஸதி கிமந்யதிக்பாலை: ॥

கடிகாசைல ஹரௌ — கடிகைமலையிலுள்ள நரஸிம்ஹப்பெருமான், ஸமவர்த்திநி — (1) எல்லோரிடம் ஸமமாக நடந்து கொள்பவனாகவும் (2) யமனாகவும், புவநேசே — (1) உலகங்கட்குத் தலைவனாகவும் (2) அத்தகைய இந்திரனாகவும், (3) நீருக்குத் தலைவனான வருணனாகவும், புண்யஜநே — (1)புண்யர்களாகிய பக்த ஜனங்களையுடையவனாகவும் (2) நிர்ருதி என்கிற ராக்ஷஸனாகவும், பாவகே — (1) சுத்தியை உண்டு பண்ணுகிற வனாகவும் (2) அக்நியாகவும், ஜகத்ப்ராணே — (1) உலகுக்கெல்லாம் உயிராகவும் (2) ப்ராணனான வாயுவாகவும் — ஸ்ரீதே (1) செல்வத்தை யளிப் பவனாகவும் (2)குபேரனாகவும், சிவே(அ)பி — (1) மங்க ளத்தை உண்டு பண்ணுமவனாகவும் (2) சிவபெருமா னாகவும், ஸதி — இருக்கும் போது, அந்ய திக் பாலை: —வேறான யமன் இந்திரன் முதலிய திக்பாலகர்களாலே, கிம் — எனக்கு என்ன பயன்?

எம்பெருமானே — எல்லாத் திக்பாலகர் களுடையவும் பெயர்களுக்குப் பொருத்தமான

பொருளாகவுள்ளமையினாலும் அவர்களனை வர்க்கும் அந்தர்யாமியாக இருப்பதனாலும் ஸமஸ்த திக்பாலகஸ்வரூபனாக இருப்பதனால் இவனொரு வனைக் கொண்டே, அவர்களாலுண்டாகும் காரியங் களெல்லாவற்றையும் சாதித்துக் கொள்ளலாயிருக் கையால் அவர்களால் எனக்குக் காரிய மேதுமில்லை யென்றாராயிற்று இதனால். புவநம்- உலகமும், நீரும்.

९१)यस्योदयः परार्थः यस्यालोकेन यात्यघं विलयम् ।
कालेन बोधयति यः घटिकामित्रेऽत्र को विरागी स्यात् ॥

(91) யஸ்யோதய: பரார்த்த: யஸ்யாலோகேந யாத்யகம் விலயம்।
காலேந போதயதி ய: கடிகாமித்ரேऽத்ர கோ விராகீ ஸ்யாத் ॥

யஸ்ய – எவனுடைய, உதய: (1) உதயமானது (2) தோற்றமானது (அவதாரமானது), பரார்த்த: – (1) பிறர் தூக்கம் விட்டெழுந்து நல்லகாரியம் செய்து சுகப் படுவதற்காக ஏற்படுகிறதோ (2) நல்லோர்கள் வாழ்வு பெறுவதற்காக ஏற்படுகிறதோ, யஸ்ய ஆலோ கேந – (1) எவனைக் காண்பதனால் (2) எவனுடைய கடாக்ஷத்தி னாலே, அகம் – பாபமானது, விலயம் யாதி – நாசத்தை யடைகிறதோ, ய: – எவன், காலேந – (1) உரிய காலத்தில் (இரவுமுடியும் ஸமயத்தில்) (2) அஜ்ஞானம் நீங்க வேண்டிய நல்ல காலம் கிட்டும்போது, போதயதி – (1)விழிப்பை உண்டு பண்ணுகிறானோ (2)தானாகவோ அல்லது ஆசாரியர் கள் வாயிலாகவோ ஜ்ஞானத்தை உண்டாக்கு கிறானோ, அத்ர கடிகாமித்ரே – அத்தகைய இந்த கடிகைமலைச் சூரியனிடத்தில், க:–எவன், விராகீ ஸ்யாத் – ஆசையற்றவனாக இருப்பான்.

இதில் கடிகைமலையெம்பெருமானைச் சூரியனாக ரூபணம் செய்தார். விசேஷணங்களின் பொருள்களைத் தனித்தனியே பிரித்தறிந்துகொள்க.

९२)सरसे जाग्रति घटिकाशैलगते सरसिजालये मोहात् ।
विरसेषु चित्तनामा विषयेक्षुरकेषु विहरते भृङ्गः ॥

*92)* ஸரஸே ஜாக்ரதி கடிகாசைலகதே ஸரஸிஜாலயே மோஹாத் ।
விரஸேஷு சித்தநாமா விஷயேக்ஷுரகேஷு விஹரதே ப்ருங்க: ॥

கடிகாசைலகதே – (1)கடிகைமலையை அடைந்ததும் (2) கடிகைமலையை அடைந்தவனும், ஸரஸே – (1) நீர் நிறைந்ததும் (2) ஆச்ரிதரிடம் அன்புடையவனும், ஸரஸிஜா ஆலயே – (1) தாமரைமலர்களுக்கு இருப்பிடமுமான தடாகம், (2) பிராட்டிக்கு இருப்பிடமுமான எம்பெருமான், ஜாக்ரதி – (1) தன்னிடம் மலர்ந்த மலர்களால் விழித்திருக்கச் செய்தேயும், (2) நம்மிடம் யாராவது வரப்போகிறார்களா என்று கவனமாயிருக்கச் செய்தேயும், (1)அதனை (2) அவனை (அலக்ஷ்யம் பண்ணி), சித்தநாமா ப்ருங்க: – எனது (1)மனமென்னும் (2) வண்டானது, விரஸேஷு – (1) சுவையற்ற (2) அன்பற்ற, விஷய இக்ஷுர கேஷு – (2) ஸ்த்ரீ முதலிய (1) முள்ளி மலர்களில், விஹரதே – அலைந்துதிரிகிறது.

தாமரைக்குளத்தில் தேன்நிறைந்த தாமரை மலர்கள் மலர்ந்து கிடக்க, அதைவிட்டுச் சுவையற்ற முள்ளிமலரில் அலையும் மதியற்ற வண்டு போலே என்மனமானது – பிராட்டிக்கு வாஸஸ்தானமாய் அவள் காரணமாக ஆச்ரிதர்களிடத்தில் அன்பு நிறைந்த எம்பெருமான் கடிகைமலையில் நம்மை எதிர் பார்த்

திருக்க, அவனை அநாதரம் பண்ணி, அன்பு சிறிது மின்றிக்கேயிருக்கும் பெண்களிடத்தில் அலைந்து திரிகின்றது என்றாராயிற்று. இதுவும் நைச்யாநு ஸந்தானம். நாம் திருந்துவதற்காக இப்படி அருளிச் செய்யப்பட்டதென்று கருதுக.

९३)बिभ्रति सदैव लक्ष्मीं विभ्राजति मित्रमण्डले विदुषाम् ।
घटिकाद्रिसार्वभौमे किं वा घटते न संश्रिताभिमतम् ॥

(93) பிப்ரதி ஸதைவ லக்ஷ்மீம் விப்ராஜதி மித்ரமண்டலே விதுஷாம் ।
கடிகாத்ரி ஸார்வபௌமே கிம்வா கடதே ந ஸம்ச்ரிதாபிமதம் ॥

ஸதைவ!—எப்போதும், லக்ஷ்மீம் — (1) ஸ்ரீமஹாலக்ஷ்மி யை (2) செல்வத்தை, பிப்ரதி — (1) திருமார்பில் தரித்துக் கொண்டிருப்பவனும் (2) வளர்த்துவைத்திருப்பவனும், மித்ரமண்டலேவிதுஷாம்விப்ராஜதி (1) ஸூர்ய மண்டலத்தில் ஞானிகள் த்யானம் செய்வதற்காக விளங்கிக் கொண்டிருப்பவனுமாகிய(2)தோழர்களான சிற்றரசர் கள் மந்திரிகள் புரோகிதர்கள் ஆகிய இவர்களின் நடுவே வித்வான்களை கௌரவிப்பதற்காகக் கொலு வில் விளங்குமவனாகிய, கடிகாத்ரி ஸார்வ பௌமே — திருக்கடிகை மலையிலுள்ள (1) எம்பெரு மானாகிய (2) சக்ரவர்த்தியினிடத்தில், ஸம்ச்ரித அபிமதம் — (1) தன்னை ஆச்ரயித்த ஞானிகளின் விருப்பமானது (2) வித்வான்களின் விருப்பமானது, கிம்வா — எதுதான், ந கடதே — நிறைவேறாது.,

இதில் எம்பெருமானைச் சக்கரவர்த்தியாக ரூபணம் செய்தார். **லக்ஷ்மீ**:—(1)பிராட்டி(2)செல்வம். **மித்ர**:— ஸூரியன், **மித்ரம்**—தோழன், **ஸார்வபௌமன்**—பூமண்டல முனைத்துக்கும் பேரரசனான சக்ரவர்த்தி. விசேஷணங் களின் பொருள்களைப் பிரித்துக் காண்க.

९४)श्रितघटिकाचलशिखरे स्थिरकरुणापूरनिर्भरे शिशिरे ।
दीव्यन्ति विमलपक्षाः दिव्ये कमलालये चिरं हंसाः ॥

(94) ச்ரிதகடிகாசலசிகரே ஸ்திரகருணாபூரநிர்ப்பரே சிசிரே ।
தீவ்யந்தி விமலப(க்ஷா: திவ்யே கமலாலயே சிரம் ஹம்ஸா: ॥

ச்ரித கடிகாசல சிகரே — கடிகைமலையுச்சியை அடைந்ததும், ஸ்திரகருணாபூரநிர்ப்பரே — நிலைத் திருக்கிற (1)கருணையாகிற (2)நீர்வெள்ளத்தால் நிறைந்ததும், சிசிரே — குளிர்ந்ததும், திவ்யே — (1) அப்ராக்ருதமுமான (2) அழகுடையதுமான, (1) கமலா— கமல ஆலயே — பிராட்டிக்கு இருப்பிடமான பெருமானாகிற, (2)கமலமலர்களுக்கு இருப்பிடமான தாமரைத் தடாகத்தில், விமலபக்ஷா: — (1) குற்றமற்ற ஞாநம் அநுஷ்டானமென்கிற (2) இரண்டு இறகுகளையுடைய, ஹம்ஸா: — (1) யோகிகளாகிற (2) அன்னப்பறவைகள், சிரம் — வெகு காலம், தீவ்யந்தி — விளையாடுகின்றன.

இதில் எம்பெருமானைத் தாமரைத் தடாகமாகவும் யோகிகளை ஹம்ஸங்களாகவும் கூறுகிறார். அன்னப் பறவைகளுக்கு ஆகாசத்தில் பறந்து செல்வதற்கு துணை செய்கின்ற இரண்டு இறகுகள்போல, யோகிகளுக்குப் பரமாகாசமான ஸ்ரீவைகுண்டத்துக்குப் பறந்து செல்வதற்கு உறுப்பாகிய ஞானமும் அநுஷ்டானமும் இரண்டு சிறகுகளாகக் கருதப்பட்டன.

ஹம்ஸா: — (1) யோகிகள் (2) அன்னப்பறவைகள். திவ்யம் (1) அப்ராக்ருதமானது (2) அழகுடையது. அன்னங்கள் தடாகத்தில் விளையாடுகின்றன, அது போல் யோகிகள் எம்பெருமானிடம் ரமிக்கின்றனர் என்க.

९५)विहरति बहुगुणजाले वीरे घटिकाद्रि कृष्णवर्त्मनि ते।
विजहति समस्ततापान् विजयन्ते किलममापि मोहमहो॥

(95)விஹரதி பஹுகுணஜாலே வீரே கடிகாத்ரி க்ருஷ்ணவர்த்மநி தே।
விஜஹதி ஸமஸ்ததாபாந் விஜயந்தே கில மமாபி மோஹமஹோ॥

பஹுகுண ஜாலே – சுத்தி நல்ல நிறம் முதலிய நற்குணங்களின் ஸமூகங்களை உடையவனும் வீரே – எரிக்கும் பராக்ரமமுடையவனுமான, கடிகாத்ரி க்ருஷ்ண வர்த்மநி – கடிகைமலையிலுள்ள அக்நியானவன், விஹரதி ஸதி – ஸஞ்சாரம் செய்யும்போது, தே – முன் ச்லோகத்தில் கூறப்பட்ட ஹம்ஸங்கள், ஸமஸ்த தாபாந் – எல்லாத் தாபங்களையும், விஜஹதி – விட்டுவிடுகின்றன, (மேலும்) மம – என்னுடைய, மோஹமபி – அஜ்ஞானத்தையும், விஜயந்தே – வெல்லுகின்றன. அஹோ – ஆச்சரியம்.

ஹம்ஸங்கள் அக்நியினிடம் சென்று தமது தாபத்தைத் தீர்த்துக் கொள்வதும், இக்ரந்த கர்த்தாவின் அஜ்ஞானத்தை வெற்றிகொள்வதும் (போக்குவதும்) ஆச்சரிய மாகையால் விரோதம் தோன்றும், பரிஹாரம் மேலே காண்க.

பஹுகுணஜாலே – க்ருபை வாத்ஸல்யம் முதலிய குளிர்ந்த பல குண ஸமூகங்களையுடையவனும், வீரே– ஸம்ஸாரதாபம் போக்கும் பராக்ரமமுடையவனுமான, கடிகாத்ரி க்ருஷ்ண வர்த்மநி – கடிகைமலையில் வசிக்கும் க்ருஷ்ணனாகிய ஸித்தோபாயமான பெருமான், விஹரதி – விஹாரம் செய்யும்போது, (அவனையாச்ரயித்து) தே – ஹம்ஸர்கள் என்று கூறப்பட்ட யோகிகள், ஸமஸ்ததாபாந் – ஆத்யாத்மி

கம் ஆதிபௌதிகம் ஆதிதைவிகமாகிய எல்லாத் தாபங்களையும் (கஷ்டங்களையும்), விஜஹதி – விட்டு விட்டுச் சுகமாக இருக்கிறார்கள். (இதுவேயன்றி) மம – என்னுடைய மோஹமபி – அவிவேகத்தையும், விஜயந்தே – தமது உபதேசத்தாலே வெற்றிகொள் கிறார்கள். இப்படிப்பொருள் கொண்டால் முற் காட்டிய விரோதம் தோன்ற இடமில்லாமை காண்க.

க்ருஷ்ணவர்த்மா – (1) கறுத்த வழியை உடையது (தன் வழியைக் கறுப்பாக்குவது) ஆகையால் இது அக்நிக்குப் பெயர் (2) க்ருஷ்ணனாகிய வர்த்ம – மார்க்கம் – உபாயமென்றபடி. அதாவது க்ருஷ்ண னாகிய மோக்ஷோ பாயம். யோகிகள் எம்பெருமானை யணுகி, தாம் ஸம்ஸாரதாபம் தீர்த்துக்கொள்வதோடு தம்மை யடைந்த வர்க்கும் ஸம்ஸார தாபம் தீர்த்து மோக்ஷம்பெறுவதற்குரிய ஞானம் உண்டாவதற்காக, அஜ்ஞானம் தீரும்படி உதவுகிறார்களென்றவாறு.

९६)कनकमयकटकशोभां कलयति घटिकामहीभृतो रुचिरे ।
दीप्तिमति कृष्णवर्णे दृष्टे त्रासलवमनुभवेत् को वा ॥

(96)கநகமயகடகசோபாம் கலயதி கடிகாமஹீப்ருதோ ருசிரே ।
தீப்திமதி க்ருஷ்ணவர்ணே த்ருஷ்டே த்ராஸலவமநுபவேத் கோ வா ॥

கநகமயகடகசோபாம் – ஸ்வர்ணமயமான மலைச் சரிவின் சோபையை, கலயதி – உண்டு பண்ணுவதும், தீப்திமதி – ப்ரகாசமுடையதும் ருசிரே – அழகுடையது மான, கடிகாமஹீப்ருத:க்ருஷ்ணவர்ணே – கடிகை மலையி னுடைய கருநிறமானது, த்ருஷ்டே ஸதி – பார்க்கப்பட்ட வளவில், கோ வா – எவன்தான், த்ராஸலவம் – பயத்தின் சிறுபகுதியையும்கூட, அநுபவேத் – அநுப விப்பான்.

முன் ச்லோகத்தில் மஹான்கள் கடிகையெம் பெருமானை ஆச்ரயித்து ஸம்ஸாரதாபம் தீரப்பெறு கிறார்களென்று அருளியவர், இந்த ச்லோகத்தில் அவ் வெம்பெருமானை ஆச்ரயிக்கவும் வேண்டாம். வெகு தூரத்திலிருந்தே கடிகைமலையைக் கண்டாலே போதும். சிறிதும் ஸம்ஸாரத்திற்கு அஞ்சவேண்டாம் என்கிறார். மலையின் அழகு – ***கநகமயகடக சோபாம் கலயதி தீப்திமதி க்ருஷ்ணவர்ணே*** – என்றதனால் குறிக்கப்படுகிறது. மரங்கள் அடர்ந்திருப்பதால் மலை யின் கீழ்ப்பகுதி கறுத்துத் தோன்றுகிறது. அக்கரு நிறமானது – சிவப்புப்பாறைமயமாகையால் தங்க நிறமுள்ள சரிவுக்குச் சோபையையுண்டாக்கித் தானும் அத்தங்கநிறப் பாறை களால் சோபையை அடைகிறது. இங்ஙனம் அத்திருமலையின் கருநிறமே நம்முடைய அச்சமனைத்தையும் அகற்றவல்லதென்றாராயிற்று. இருள்பேய் முதலியவற்றின் கருநிறம் அச்சத்தை உண்டாக்கும். இம்மலையின் கருநிறம் அச்சத்தையும் போக்குமென்றபடி. *திருவேங்கடமாமலை யொன்றுமே* ***தொழ நம் வினை ஓயுமே*** *(திருவாய்மொழி 3–3–8)* என்று நம்மாழ்வார் அருளியதுபோலவே இதையும் கருதுக.

९७)सप्तर्षिसेव्यमाने सन्ततसुमनःस्तुते सहस्राक्षे ।
रमतां मनो हरौ मे राजति घटिकाद्रिरत्नसानुतटे ॥

**(97)ஸப்தர்ஷிஸேவ்யமாநே ஸந்ததஸுமநஸ்ஸ்துதே ஸஹஸ்ராக்ஷே ।**
**ரமதாம் மநோ ஹரௌ மே ராஜதி கடிகாத்ரி ரத்னஸாநுதடே ॥**

**ஸப்தர்ஷி ஸேவ்யமாநே** – ஸப்தரிஷிகளால் ஸேவிக்கப்பட்டவனும், **ஸந்தத ஸுமநஸ் ஸ்துதே** – எப்போதும் தேவர்களால் துதிக்கப்பட்டவனும்,

ஸஹஸ்ராக்ஷ: — ஆயிரங் கண்ணுடையவனும், கடிகாத்ரி ரத்நஸாநுதடே — கடிகை மலையென்கிற மேருமலையின் சரிவில், ப்ராஜதி — விளங்குமவனான, ஹரௌ — (1) இந்திரனிடத்தில் (2) நரஸிம்மப்பெருமாளிடத்தில், மே மந: — என்னுடைய மனஸ்ஸானது, ரமதாம் — ப்ரீதியை அடைந்திடுக.

இதில கடிகையெம்பெருமானை தேவேந்திர னாக வருணிக்கிறார். ஸப்தரிஷிகளால் ஸேவிக்கப் பெறுவதும் தேவர்களால் துதிக்கப்படுவதும், ஆயிரங் கண்ணுடைமையும் தேவேந்திரனுக்கும் எம்பெரு மானுக்கும் பொதுவானவை. ஹரி: என்பது இந்திர னுக்கும், திருமாலுக்கும், சிங்கத் துக்கும் பெயர். எம்பெருமான் கடிகைமலையில் வசிக்கிறான். இந்திரன் மேருமலையில் வசிக்கிறான். கடிகை மலையே இதில் மேருமலையாக உருவகிக்கப் பட்டது.

ஸப்தரிஷிகள் ஆவார் — வஸிஷ்டர், காச்யபர், அத்ரி, ஜமதக்நி, கௌதமர், விச்வாமித்ரர், பரத்வாஜர் என்ற எழுவர் என்று விஷ்ணுபுராணம் (3—1—32) கூறும். மரீசி, அங்கிரஸ்ஸு, அத்ரி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, வஸிஷ்டர் ஆகிய எழுவரென்றும் கூறுவர்.

९८)पादस्पर्शनविभवात् पालितभुवने प्रबोधितात्मगुणे ।
भजतु घटिकाद्रिमित्रे भगवति भावं मनस्सरोजं मे ॥

(98)பாதஸ்பர்சனவிபவாத் பாலிதபுவநே ப்ரபோதிதாத்மகுணே ।
பஜது கடிகாத்ரிமித்ரே பகவதி பாவம் மநஸ்ஸரோஜம் மே ॥

பாதஸ்பர்சந விபவாத் — (1) தனது கிரணங்களின் ஸம்பந்தமாகிற பெருமையினால் (2) தனது திருவடிகளின் ஸம்பந்தமாகிற பெருமையினால்,

பாலிதபுவநே – உலகங்களைக் காப்பவனும், ப்ரபோதித ஆத்மகுணே – (1) தூங்கும்போதுகூம்பிய – ஆத்மாவின் குணமாகிய அறிவை மலரச்செய்பவனும், (2) மோக்ஷோபாயமாகிய தத்வஜ்ஞானத்தை மிகவும் உண்டாக்குமவனுமாகிய, கடிகாத்ரி மித்ரே பகவதி – கடிகைமலையிலுள்ள (1)சூரியனாம் (2)எம்பெருமானிடத்தில், மே மநஸ் ஸரோஜம் – என்னுடைய மனமாகிய தாமரைமலரானது, பாவம் பஜது – (1) ப்ரீதியை (2) பக்தியை, பஜது – அடைந்திடுக.

முன்பு சில ச்லோகங்களில் போலேவே இதிலும் கடிகையெம்பெருமானைச் சூரியனாக உருவகித்தார்.

९९) तुष्टेऽल्पतः सुशीले सुगुणगृहीते सुलक्षणे सदृढे ।
आरोपितो मदीयो भद्रे घटिकाद्रि धूर्वहे भारः ॥

(99)துஷ்டே ऽல்பத: ஸுசீலே ஸுகுணக்ருஹீதே ஸுலக்ஷணேஸுத்ருடே।
ஆரோபிதோ மதீயோ பத்ரே கடிகாத்ரி தூர்வஹே பார: ॥

அல்பத:துஷ்டே – (1) சிறிது கொடுத்தாலும் அதனால் ஸந்தோஷிப்பவனும் (2) சிறிது ஆஹாரமிட்டாலும் மகிழ்ச்சியடைவதும், ஸுசீலே – (1) பக்தர்களோடு பேதமில்லாமல் கலந்து பழகுதலை – சீலத்தை மிகவுமுடையவனும் (2)தன்னண்டையில் வந்தவர்களைக் கொம்பிலும் குளம்பிலும் ஏற்காமல் ஸாதுவாக இருப்பதும், ஸுகுணக்ருஹீதே – (1) ஜ்ஞாநம் பக்தி சாந்தி வைராக்யம் முதலிய நற்குணங்களையுடையவர்கட்கு வசப்படுபவனும் (2)நல்ல கயிற்றால் கட்டிவைத்தால் அதற்கு அடங்கியிருப்பதும், ஸுல க்ஷணே – (1)நல்ல உத்தம புருஷ லக்ஷணங்களையுடையவனும்

(2) எருதுக்கு இருக்க வேண்டிய நல்ல ஸாமுத்ரிக லக்ஷணங்களையுடையதும், ஸூத்ருடே – (1) பிராட்டி போல்வார் குற்றங்களையுரைத்தாலும் ஆச்ரிதர் களைக்காப்பதில் மிகவும் மனத்திண்மையுடையவனு மான(2)மிகவும் பாரமேற்கத்தக்க பலமுடையதுமான, கடிகாத்ரி தூர்வஹே– கடிகாத்ரியில் எழுந்தருளியிருந்து எல்லோருடைய ரக்ஷணபாரத்தையும் வகிக்கிற (1) எம்பெருமானாகிற பத்ரே – (2) எருதினிடத்தில், மதீய: – என்னுடைய, பார: – ரக்ஷணமாகிய பாரமானது (சுமையானது) ஆரோபித: – ஏற்றப்பட்டது. பத்ர: – எருது.

இதில் எம்பெருமான் பத்ரமாக – எருதாக உருவகிக்கப்பட்டான். ஒருவன் தன்னுடைய பொருள் பாரத்தை எருதினிடம் ஏற்றுமாபோலே இக்கவிஞர் தம்மைக் காப்பாற்றுதலாகிய பாரத்தை எம்பெரு மானாகிய எருதினிடம் ஏற்றினார். இந்த பரஸமர்ப் பணம் ஸித்தோபாய நிஷ்டர்க்குத் தன்னடையே உண்டாகும் ஸ்வபாவமிறே.

१००) अननुगुणामपि वाणीम् आगस्सन्दोहमन्दमतिकलिताम् ।
अङ्गीकरोतु भगवान् आश्रितदोषावलोकनाऽकल्यः ॥

(100)அநநுகுணாமபி வாணீம் ஆகஸ்ஸந்தோஹமந்தமதி கலிதாம் ।
அங்கீகரோது பகவாந் ஆச்ரித தோஷாவலோகநாகல்ய: ॥

ஆச்ரிததோஷஅவலோகநஅகல்ய: – தன்னை யடைந்த பக்தர்களின் குற்றங்களைக் காண்பதில் திறமையற்றவனான, பகவாந் – ஜ்ஞாநம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ் என்கிற ஆறுகுணங்களை யுடைய எம்பெருமான், ஆகஸ் ஸந்தோஹ மந்தமதி

**கலிதாம்** — குற்றங்களின் திரட்சிக்கு இருப்பிடமான — அல்ப புத்தியான அடியேனால் சொல்லப்பட்ட . **வாணீம்** — இந்த ஸ்தோத்ரமாகிய வாக்கை, **அநநுகுணாம் அபி** — (தன்னுடைய பெருமைக்குத்) தக்கதாக இல்லா விட்டாலும், **அங்கீகரோது** — (தனது ஸ்தோத்ரமாக) ஏற்றுக் கொள்வானாக.

தமது கவிதையில் சொல்லும் பொருளும் நன்றாக அமைந்திராமையால் தனது வைபவத்திற்கு ஏற்றிராவிட்டாலும் எம்பெருமான் — தமது பக்தி யொன்றையே முக்கியமாகக் கொண்டு தமது கவிதை யை ஏற்றுக் கொள்ளட்டுமென்று எம்பெருமானை இதனால் ப்ரார்த்தித்தாராயிற்று. 'இளைய புன் கவிதையேலும் எம்பிராற்கினியவாறே' என்றாரிறே தொண்டரடிப் பொடிகளும்.(திருமாலை —45)

கல்ய: — ஸமர்த்தன்; அகல்ய: — அஸமர்த்தன். அங்கீகரோது — ப்ரார்த்தனைப் பொருளில் வந்த **லோட்** ப்ரத்யயாந்தம்.

१०१)स्वामिन एव कृतिर्मे सुक्तिस्तोषाय तदपि तस्यैषा ।
स्वाकृतिमनुवदति बाले सुतरां तातोऽपि तोषमुपयाति ॥

**(101) ஸ்வாமிந ஏவ க்ருதிர்மே ஸூக்திஸ்தோஷாய ததபி தஸ்யைஷா।
ஸ்வோக்திமநுவததி பாலே ஸுதராம் தாதோபி தோஷமுபயாதி ॥**

மே க்ருதி: — என்னுடைய இந்த க்ரந்தமானது, ஸ்வாமி ந: ஸூக்தி: ஏவ — திருக்கடிகையெம்பெருமானுடைய ஸ்ரீஸூக்தியே ஆகும். ததபி — அத்தகையதாயினும், ஏஷா — இந்த ஸ்ரீஸூக்தியானது, தஸ்ய தோஷாய — அவனுடைய ஸந்தோஷத்தின் பொருட்டு ஆகிறது.

(எப்படியென்னில்) பாலே — தன் குழந்தையானது, ஸ்வ உக்திமபி —(தகப்பனாரான) தனது சொல்லா யிருந்தாலும் அதை, அநுவததி ஸதி? — அப்படியே அநுவதித்துப் பேசுமளவில், தாத: — தகப்பன், ஸுதராம் — மிகவும், தோஷம் — ஸந்தோஷத்தை, உபயாதி(கலு) — அடைகிறான் அல்லவா?

எம்பெருமான் எனக்குள்ளேயிருந்து இந்த ச்லோ கங்களை எனக்குச் சந்தைபோல் சொல்ல, அதை நான் அநுவதித்துப் பேசினவளவேயன்றி வேறில்லை அப்படியிருந்தாலும், அடியேன் அதைத் திருப்பிச் சொன்ன மாத்திரத்தையே குவாலாகக் கொண்டு— அடியேனே சொன்னதாகக் கொண்டு மிகவும் ஸந் தோஷக்கிறான் என்றதாயிற்று. என்சொல்லால் யான் சொன்ன இன்கவி யென்பித்துத் தன் சொல்லால் தான் தன்னைக் கீர்த்தித்த மாயன் (திருவாய்.7–9–2) என்றாரிறே ஆழ்வார்.

१०२)भक्तोचितोपयुक्तां भक्त्या सौम्यवरकिङ्करोपहिताम्।
अमृतफलावलिमनघाः मृदुलामास्वाद्य मृत्युमतियान्ति ॥

(102) பக்தோசிதோபயுக்தாம் பக்த்யா ஸௌம்யவர கிங்கரோபஹிதாம்।
அம்ருதபலாவளிமநகா: ம்ருதுளாமாஸ்வாத்ய ம்ருத்யுமதியாந்தி ॥

பக்த்யா — பக்தியோடுகூடி, ஸௌம்யவரகிங்கர உபஹிதாம் — மணவாளமாமுனிகளின் அடியவனாகிய அடியேனால் ஸமர்ப்பிக்கப்பட்டும், பக்தோசித உப யுக்தாம்—தக்கானாலே செவிசாத்தப்பெற்றும், ம்ருதுளாம் — பக்தியினால் மெத்தென்றுள்ள — கனிந்துள்ள, அம்ருதபல ஆவளிம் — அமுதம்போல் தித்திக்கும்

பழங்களாகிய ச்லோகங்களின் வரிசையை, ஆஸ்வாத்ய —சுவைத்து அனுபவித்து, அநகா: — பாவம் தொலையப் பெற்றவர்களாய்க் கொண்டு (மக்கள்) ம்ருத்யும் — ஸம்ஸாரத்தை, அதியாந்தி — கடந்து பரமபதம் செல்லுகிறார்கள்.

பால்குடிக்கத் தன்னடையே பித்தம் தீருமா போலே, மதுரமான இந்த ச்லோகங்களை இனிமையாக அனுபவித்தவர்கள் பாபம் தீரப்பெற்று ஸ்ரீவைகுண்டத்திலே போய் பகவதனுபவ கைங்கர்யங்களைப் பெற்று இன்புறுவரென்று இந்நூலுக்குப் பலன் சொல்லி, இந்நூலைத் தலைக்கட்டினாராயிற்று.

அம்ருதபலமென்று எம்பெருமானுக்குப் பெயர். அவனைப் பற்றியதாகையால் இச்லோகங்களும் அம்ருத பலங்களாயின. பகவத்ஸாக்ஷாத்கார ரூபத்தையடைந்த பகவத்ஸ்ம்ருதி யானது — தனக்கு விஷயமான பகவத் ஸ்வரூபம் பக்தனுக்கு மிகவும் ப்ரியமாக உள்ளமையினால், அந்த ப்ரியதமமான பகவத் ஸ்வரூபத்தை விஷயீகரித்த ஸ்ம்ருதிதானும் மிகவும் ப்ரியமாக உள்ளதென்று கூறுவதுபோலவே, இதையும் கொள்க. அதாவது எம்பெருமான் அமுதக்கனி போன்று தித்திக்கிறான், அவனைப்பற்றி எழுந்தவையாகையால் இந்த ச்லோகங்களும் அமுதக்கனி போல் தித்திப்பனவாயின என்றபடி.

**ஸ்ரீ வேங்கடேச சரணௌ சிரஸி கரோமி**

(1) என்று திருவேங்கடமுடையானுடைய திருவடிகளை தம் திருமுடியில் வைத்துக்கொண்டு தொடங்கிய

க்ரந்தம் இடரின்றி இனிதே முடிவடைந்தது. *யத்பராக பரமாணு: பவஜலதிம் பிபதி* (1) என்று ஸம்ஸார நிவ்ருத்தியிலே தொடங்கி, *ம்ருத்யுமதியாந்தி* (102) என்று ஸம்ஸார நிவ்ருத்தியிலே தலைக் கட்டின படியால், ஸம்ஸாரநிவ்ருத்தி முன்னாகப் பரமபதாநு பவமே இந்நூலுக்குப் பரமப்ரயோஜனமென்று குறிப் பிட்டருளியவாறு காண்க.

ஸ்ரீவத்ஸகுலதிலகராய், மணவாளமாமுனிகளின் சிஷ்யர்களான அஷ்டதிக்கஜாசார்யர்களில் ஒருவராய், ஸர்வலோக சரண்யாசார்யரின் திருக்குமாரராய், எறும்பியப்பா என்னும் மறுபெயருடைய ஸ்ரீதேவ ராஜகுரு அருளிச்செய்த அம்ருதபலாவளி: என்கிற கடிகாசல நரஸிம்ஹஸ்தோத்ரம் முடிவு பெற்றது.

எறும்பியப்பா திருவடிகளே சரணம்

சுபம்

தி,அ,கிருஷ்ணமாசார்ய தாஸன்
எழுதிய அம்ருதபலாவளியுரை
முற்றுப் பெற்றது.

श्रीमते रम्यजामातृमुनीन्द्राय महात्मने ।
श्रीरङ्गवासिने भूयात् नित्यश्रीः नित्यमङ्गलम् ॥

